# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.

Vol. 29. பொருளடக்கம். No. 8.
சுபானு௵ மாசி௴ கஉ

உள்ளடக்கம். பக்கம்.

# "சகுந்தலா" கூந்தல் வளரும்

## பரிமளத் தைலம்

ஆழாக்கு எண்ணெய் அடங்கிய




இத்தைலத்தின் பரிமளம் எவருக்கும் இன்பத்தை யளிக்கும். இது கூந் தலை நீளமாக வளரச் செய்யும். மூளையின் கொதிப்பைத் தணியச் செய் யும். கண்களுககுக் குளிர்ச்சியைத் தரும். சிரசிலுள்ள பல வியாதிகளையும் நிவர்த்தி செய்யும். கண்களில் நீர்வடிதல், தலையில் புண், மயிர்வெடிப்பு மயக்கம், தலைச்சுற்றல், தேக நமைச்சல், சொறி, சிரங்கு, கற்றாழை நா றம், மனோ வியாகூலம், ஞாபகமறதி இவைகளைப் போக்கடித்துத் தே ஆரோக்கியத்தைத் தந்து வாசனையை உண்டாக்கும். இந்தத் தைலம், ப வனமூலிகைகளால் சாஸ்திரப்படி தயார் செய்யப்பட்டது. இதில் ஒரு டி தைலம் வாங்கிப் பார்த்தால் இதன் அருமை விளங்கும்.

## மகா சந்தனாதித் தைலம்

வெயிற்காலத்திற்கு அவசியமானது

இந்த தைலத்தைத் தேய்த்துக் கொண்டு வாரத்திற்கு 2 ஸ்நானங்கள் 10 ஸ்நானங்கள் செய்பவர்கட்குத் தீராத பித்தபாண்டு, நாள்பட்ட பழை சுரம், குளிர்சுரம், 18 வித ஜன்னி, கழுத்திலும் கால்களிலும் உண்டாகு நோய், அஸ்தி வெட்டை, அஸ்தி சுரம், கபால சூலை, கண்ணெரிவு, கை லெரிவு, சொறி, சிரங்கு, நமைச்சல், பீனிசம் முதலிய அனேக நோய்க நீங்கி தேகத்திற்கு சுகமுண்டாகும். கவனசக்தியும், கண்களுக்கு நல்ல ஒ யும் உண்டாகும். இப்போது சந்தனாதித் தைலமெனப் பல தைலங் பலரால் வெளிப்படுத்தப்பட் டிருக்கின்றன. நண்பர்கள் அவற்றை வாங் பரீக்ஷித்துப் பார்த்திருப்பீர்கள். இது அசல் சந்தனத்தைக் கொண்டு மி பணச் செலவிற் செய்யப்பட்டது.

**ஒரு சேர் தைலம் ரூபா 1—12—0. அரை சேர் தைலம் ரூபா 1.**

---

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, ம**

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

தொகுதி 29 | சுபாநு௵ மாசிமீ ௧உ | 1944௵ பிப்ரவரிமீ 13உ | பகுதி 8

## கடவுள் வணக்கம்.

நிரவொலி வெள்ளம் மண்டிநெடு அண்டமூட
    நில(ம்) நின்று தமபமதுவப்
பரமொரு தெய்வம் எய்த இது
    ஒப்பதில்லை இருபாலு(ம்) நின்று பணியப்
பிரமனு(ம்) மாலும் மேலைமுடியோடு
    பாதம் அறியாமை நின்ற பெரியோன்
பரமுத லாயதேவர் சிவனாய் மூர்த்தி
    அவனும் நமர்கொர் சரணே. (1)

காலமும் நாள்கள் ஊழி படையாமுன்
    ஏகஉருவாகி மூவர் உருவில்
சாலவு மாகிமிக்க சமயங்கள் ஆறின்
    உருவாகி நின்ற தழலோன்
ஞாலமு(ம்) மேலைவிண்ணொடு உலகேழும் உண்டு
    குறளாய் ஓராலின இலைமேல்
பாலனு மாயவற்கு ஓர்பரமாய மூர்த்தி
    அவனும் நமக்கொர் சரணே. (2)

நீடுயர் மண்ணும் விண்ணு(ம்) நெடுவேலை
    குன்றொடு உலகேழும் எங்கு(ம்) நலிய
கூடிய கையராகி இமையோர் கணங்கள்
    துதியோதி நின்று தொழலும்
ஓடிய தாருகன்தன் உடலம் பிளந்
    மொழியாத கோப மொழிய
ஆடிய மாநட்டத்து எம்அனலாடி பாதம்
    அவையா(ம்) நமக்கொர் சரணே. (3)




# பொது மொழி அவசியமே! ஆனால்...?

"இந்நாட்டில் சமயங்கள் பல இருக்கலாம்; கணக்கற்ற சாதிகள் இருக்கலாம்; ஆனால், இந்தியக் கலாசாரம் அல்லது ஞானப்பண்பு என்பது அவையனைத்துக்கும் ஒன்றேதான். அதில் வெளித் தோற்றத்தில் காணும் மாறுதல்கள் உண்மையில் அதன் பல முகங்களாகும். அவ்வளவும் திரண்டதொரு ஐக்கியமே ஒரு பூர்ணமான இந்தியக் கலாசாரமாக விளங்குகிறது. இந்த அடிப்படையான ஒற்றுமையைக் குறிக்கும் அம்சங்கள் எவ்வளவோ உண்டு" என்று ஸ்ரீ ச. இராஜகோபாலாசாரியார் சமீபத்தில் நடந்த உஸ்மானியா சர்வ கலாசாலை பட்ட மளிப்பு விழாப் பிரசங்கத்தில் குறிப்பிட்டார்.

அவர் மேலும் இந்தியப் பொது மொழியைக் குறித்துப் பேசுகையில், "ஒற்றுமைக்கு ஆதாரமான அம்சங்களில் பொது மொழியும் ஒன்று. அந்த ஸ்தானம் இந்தி, இந்துஸ்தானி உருது என்று பல பெயர்கள் கொண்ட ஓரே மொழிக்குத் தான் உரியதென்பது ஏற்கனவே பல முறை ஊர்ஜிதப் படுத்தப்பட்ட விஷயமாகும். நம்மவரிலேயே ஒரு சிலர் பொது மொழியாக இருக்க வேண்டியது இந்தியா? உருதுவா என்ற ஆராய்ச்சியில் இறங்கி விதண்டா வாதத்தை வளர்த்து வருகின்றனர். இந்திக்கும் உருதுவுக்கும் உள்ள வித்தியாசம் மிகவும் சொற்பம். இந்துஸ்தானியில் புதிய வார்த்தைகள் சேர்ந்து, அதன் வளம் பெருகப் பெருக, இந்திக்கும் உருதுவுக்கும் தற்போதுள்ள சிறு வேற்றுமையும் அடியோடு மறைந்து விடுவது திண்ணம். விஞ்ஞானம் போன்ற விஷயங்களை எடுத்துக் கூற இந்திய மொழி யெதுவும் அருகதையில்லை என்றும் கூறப்படுகிறது. ஆங்கிலத்தைப் போல, அவ் விஷயங்களை இந்துஸ்தானியிலும் மிகத் தெளிவாக உணர்த்த முடியும் என்பதை உஸ்மானியா சர்வ கலாசாலை செய்து காட்டி வருகிறது." என்று விவரித்தார்.

அத்துடன், ஸ்ரீ இராஜகோபாலாசாரியார் நில்லாமல், "பொது மொழியை வளர்ப்பதற்காக, பல் வேறு சமயத்தின ரின் அல்லது சாதியினரின் தாய் மொழிகளுடைய வளர்ச்சியை அலட்சியம் செய்தாக வேண்டியதில்லை. இரு நோக்கங்களும் ஒன்றுக்கொன்று முரண்படாத வழியில் ஈடேறுமாறு செய் வது சாத்திய மானதே" என்று பொருள் படப்பேசி யுள் ளார். இது எவ்வளவுதூரம் அனுபவ சாத்தியமானது என்ற விஷயத்தில் தான் நமக்குச் சந்தேகமுண்டாகிறது. பிற மொழி களில் கவர்ச்சி யேற்பட்டவுடனே தாய் மொழியை அலட்சியஞ் செய்வது நம் தமிழ் மக்கள் பெரும்பாலாருடைய இயல்பாக இருக்கிறது. அதற்குச் சென்ற கால சரித்திரமே சான்றாக இருக்கிறது. நம்நாட்டிலே நூறு ஆண்டுகளாக அரசாங்கத்தார் ஏற்படுத்தியுள்ள ஆங்கிலக் கல்வியைக் கற்று மேனாட்டு நாக ரிகம், சரித்திரம் இவற்றைப் படித்தவர்கள், தாய் மொழியாகிய தமிழைப் பற்றித் தாழ்ந்த கருத்துடையவர்களா யிருந்து வரு வது கண்கூடு. மேனாட்டுக் கலை வாயிலாகத்தான் நாம் முன் னேற முடியும் என்ற மனப்பான்மையை அவர்கள் கொண் டுள்ளனர். இதன் பலனாக, இன்று நம் தாய் மொழியை நாம் காப்பாற்ற வேண்டியது அவசியம் என்று எடுத்துக் கூற வேண்டிய நிலைமை வந்துவிட்டது என்றால், அது நமக்கு அவ மதிப்பைக் கொடுக்கும் விஷய மன்றோ! ஸர். சண்முகஞ் செட்டியார் ஒரு கூட்டத்தில் கூறியதுபோல், உத்தியோகத் துக்காக ஆங்கிலமும், சமயச் சடங்குகளுக்காக சமஸ்கிருத மும், தேசியத்துக்காக இந்தியும், சங்கீதத்துக்காகத் தெலுங் கும் கற்று வந்தோமானால், தாய் மொழியாகிய தமிழ் எந்த பயோகத்துக்கு வரும்?" என்று கேட்கக்கூடிய நிலைமை ந்துவிட்டது என்றால், அதைவிட வேறு கேவலமான நிலை ற்பட முடியுமோ!

இவ்வித நிலையில், ஸ்ரீ இராஜகோபாலாசாரியார் போன் இந்தியைத் தேசப் பொது மொழியாகக் கருதி எல்லோரும் கற்க வேண்டு மென்பதும், அதனால் தாய் மொழி வளர்ச்சி குன்றுமென்பதும் சிறிதாயினும் பொருந்துமா என்று அறி ஞர்களைச் சிந்தித்துப் பார்க்க வேண்டுகிறோம்.

ஆங்கில ராஜ தந்திரியும் பேரறிஞருமான மிஸ்டர் மெக் காலே பிரபு முன்னொரு சமயத்தில், "இந்தியாவை அடிமைப் படுத்துவதற்கு குண்டு, துப்பாக்கி, பீரங்கி வேண்டிய நில்லை. இவற்றிற்குப் பதிலாக, ஆங்கிலக் கல்வியை விரிந்து பரவி யுள்ள இந்திய நாட்டில் பரப்பினால் போதும்" என்று கூறி யுள்ளதை இங்கு இச்சமயத்தில் ஞாபகப் படுத்திக்கொள்ள வேண்டுகிறோம். மி. மெக்காலே இவ்விதம் கூறியுள்ளதன்

ஆழ்ந்த பொருளைக் கூர்ந்து கவனிக்க வேண்டுகிறோம். பல மொழிகள், பல சாதிகள், பல சமயங்களாகப் பிரிந்துள்ள இந்தியர்களுக்கு அன்னிய மொழி, கலை, நாகரிகங்களில் அபார மோக முண்டு. ஆகவே, அவர்களை ஆங்கில மொழி, கலை, நாகரிகங்களைக் கொண்டு எளிதாகப் பிரித்தாளலாம் என்பதே மி. மெக்காலே இந்தியர்களிடையே ஆங்கிலக் கல்வியைப் புகுத்துவதொன்றே அமையும் என்று கூறியதன் கருத்தாகும். பொதுவாக, இந்தியர்கள் அன்னியக் கலை, நாகரிகங்களில் மோக முடையவர்களானாலும், தமிழ் மக்கள் அவ் விஷயத்தில் இன்னும் மோசமான மனோபாவ முடையவர்கள் என்று கூறினால் மிகையாகாது. வட இந்தியர்களான குஜராத்திகள், மகாராஷ்டிரர்கள், வங்காளிகள், பார்ஸிகள், பஞ்சாபிகள் தங்கள் மொழி கலாசாரங்களில் இன்னமும் பற்று வைத்திருக்கின்றனர். சமயம் நேர்ந்தால், அவர்கள் தங்கள் மொழி, சமூகப்பற்றைக் காட்டத் தவறுவதில்லை. தமிழ் நாட்டுடன் நெருங்கிய தொடர்புடைய ஆந்திரர், மலையாளிகள், கன்னடர்களும் தத்தம் மொழி, கலை வளர்ச்சிகளில் ஊக்கங் காட்டிச் சேவை செய்து வருகின்றனர். ஆனால், தமிழ் மக்கள் மட்டும் தங்கள் தாய்மொழி கலை வளர்ச்சிகளில் இன்னும் சிரத்தை காட்டாதிருந்து வருகின்றனர். ஆங்கிலம் முதலிய பிற மொழி, கலை நாகரிகங்களின் மீது அவர்களுக்குள்ள மோகம் இன்னும் குறைந்தபாடில்லை. ஆகவே, ஸ்ரீ இராஜகோபாலாசாரியார் போன்ற அறிஞர்கள் முதலில் தமிழ் மக்களுக்குத் தாய்மொழிப் பற்றை உண்டாக்கி விட்டுப் பின்னர் வேண்டுமானால், தேசப் பொதுமொழி யறிவைப் புகட்ட முயற்சி செய்யுமாறு நாம் கேட்டுக் கொள்ளுகிறோம். பொதுவாக, தமிழ் மக்களெல்லாரும், உத்தியோகத்துக்காக ஆங்கிலத்தையும், தேசியத்துக்காக இந்தியையும், மதச் சடங்குக்காகச் சமஸ்கிருதத்தையும், இசைக்காகத் தெலுங்கையும், மற்றும் பல காரணங்களுக்காக வேறு பல மொழிகளையும் பயில வேண்டுமென்று கூறப்படும் கூற்றைத்தான் நாம் ஆட்சேபிக்கிறோம். வயிற்றுப் பாட்டுக்காக அல்லும் பகலும் உழைப்பவர்களே நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேராகவுள்ள நம் தமிழ் நாட்டில் பல மொழிகளைக் கற்பதற்கு அவகாசமோ வசதியோ ஏது? என்று நாம் கேட்கிறோம். எனவே, நம் நாட்டு நிலையையும் மக்களின் மனப்பான்மையையும் சிந்தித்துப் பார்த்து எவ்விஷயத்தையும் அறிஞர்கள் கூறவேண்டும். தாய்மொழிப் பற்றும், சமூகப் பற்றும் இருந்தால்தான், ஒருவனுக்குத் தேசப் பற்றும் உண்டாக முடியும்; ஒற்றுமை யுணர்ச்சியும் ஏற்பட முடியும் என்பதை ஸ்ரீ இராஜகோபாலாசாரியாருக்கு எடுத்துக் காட்ட வேண்டியது அவசியமில்லை.

# யுத்த காலத்தில் பெண்கள்

('கார்த்திகேயன்')

அன்புமிக்க கமலா!

நீ கேட்டிருக்கிருய் இந்த யுத்தக் காலத்திலே பெண்கள் என்ன செய்யலாமென்று. ஏதோ எனக்குத் தெரிந்த வரையில் எழுதுகிறேன். அவற்றில் உன்னுல் ஒல்லும் வகைகளைக் கடைப்பிடிப்பாயாக.

முதலாவதாக யுத்தம் அவ்வப்போது எங்கெங்கே நடைபெறுகிறது, எப்படி நடைபெறுகிறது என்பதை நீ நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். முன் காலத்தைப்போல யுத்தங்கள் இப்போது நடப்பதில்லை என்று உனக்குத் தெரியும். சரித்திர காலத்தில் நாம் படித்திருக்கிருேமே அந்த யுத்தத்திற்கும் இந்த யுத்தத்திற்கும் எத்தனையோ வேற்றுமைகள் உண்டு. அந்த யுத்தத்திலே கையாண்ட முறைகளும், கருவிகளும், கொள்கைகளும் போய், இந்த யுத்தத்திலே அவைகளெல்லாம் அநாகரீகமான முறையிலே தோன்றியிருக்கின்றன என்பதை நீ மறவாதே!

எனவே, இந்தக்கால யுத்த நிகழ்ச்சிகள் ஒரே தன்மையாயிராமல் அவ்வப்போது மாறிச் செல்லுதலும் அமையும். ஆதலால் யுத்த நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து அறிந்துவரல் வேண்டும். இதற்கு உன் இல்லத்திற்கு வரும் தினசரி செய்தித் தாள்களை விடாது வாசித்துவரவும். யுத்தச் செய்தியைப் படிக்கும்போதெல்லாம் கூடவே 'அட்லாஸ்' அல்லது தேசப் படத்தையும் வைத்துக்கொள்ளுவது நல்லது. இல்லாவிட்டால், யுத்த விஷயங்கள் அவ்வளவு தெளிவாக விளங்கமாட்டா.

பொது வானொலி நிலயத்திலும் நீ யுத்தச் செய்திகளை நாள்தோறும் உணரக்கூடும். இவ்வாறு படித்தும் கேட்டும் அறியும் செய்திகளில் உனக்கு விளங்காதவை ஏதேனும் இருந்தால் உன் ஆசிரியரைக் கேட்டுத் தெரிந்து கொள்வாயாக.

நீ அறிந்துகொண்ட உண்மையான யுத்தச் செய்திகளை உனக்கு ஓய்விருக்கும்போது ஏனைய பெண்களுக்கு எடுத்துரைக்கலாம். அதனுல் அவர்களுக்கும் உண்மை தெரிவதன்றி உன்னிடத்து ஒரு மதிப்பும் கொள்வர். அவர்கள் யுத்தம் காரணமாகக் கொள்ளும் வீண் பயம், கலக்கம் முதலியனவும் நீங்கப் பெற்று மன அமைதி கொள்வர். யுத்த சம்பந்தமாக நீ செய்யக்கூடிய சேவை இது.

இரண்டாவதாக, உன் வாழ்க்கையைச் சிக்கனமாக்கிக்கொள். யுத்தத்திற்கு முன்னே கிடைத்து வந்ததுபோல் இப்போது எல்லாம் கிடைப்பதில்லை என்பதை நீ அறிவாய். மண்ணெண்ணெய், சீனி, தீப்பெட்டி, சோப்பு, காகிதம் முதலான சில்லரைப் பொருள்களிலிருந்து உணவு, உடை முதலான முக்கிய பொருள்கள் வரை எல்லாம் கிராக்கியாகிவிட்டன என்பதை நீ அறிவாய்.

முன்னுளில் அடுப்புமூட்ட மண்ணெண்ணெயை ஊற்றினேம். விளக்கில் ஊற்றும்போது மேலும் கீழும் வழிந்தோட ஊற்றினேம். சின்ன வீட்டிலும் மூலைக்கு மூலை விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. இப்போது 'பங்கீடு' என்ற முறைக்கு வந்த பிற்பாடு அதெல்லாம் முடிகிறதா? இப்படித்தான் எல்லா பொருளுக்கும்!

அதைப்போலவே, நேர்த்தியான டிம்மித் தாள்களைக் கிறுக்கியும், கிறுக்காமலும் கிழித்துப் போட்ட காலமுண்டு. ஆனல் அதெல்லாம் இப்போது முடிகிறதா? ஒரு டிம்மித்தாள் வேண்டுமானல் எத்தனைப் பாடுபட்டாலும் சில இடங்களில் கிடைப்பதாக இல்லையே!

ஆதலால், கமலா! எந்தப் பண்டமானுலும் சரிதான்! ஒரு துளியும் வீணுக்கலாகாது என்ற 'வைராக்கியம் இப்போது வேண்டும். 'சிறு துரும்பும் பல் குத்த உதவும்' என்று முன்னே பலர் சொல்லும் பழமொழி இப்போது எத்தனை உண்மையாக இருக்கிறது தெரியுமா? கிழிந்துபோன குப்பைக் காகிதம் விலையாகி விடுகிறது என்ருல், உலகத்தில் எந்தப் பொருளைத்தான் வீணுக்குவது?

குழந்தைக்கு ஆண்டு நிறைவு, அல்லது வித்தியாப்பியாசம் பெண்ணுக்கு வளைகாப்பு அல்லது சீமந்தம் என்று வைத்துக் கொண்டு பொருளுக்கு அழிவுதேட வேண்டாம். இவற்றையெல்லாம் நித்தியப்படியுள்ள சடங்குகளாகக் கருதி, சிறிதும் ஆடம்பரமற்ற வகையிலே செய்து முடிப்பதுதான் புத்திசாலித்தனமாகும்.

மூன்ருவதாக, ஓய்வு நேரத்தை வீணுக்காதே! உணவுப் பொருள் பஞ்சமில்லாதிருந்த இந்தச் சோழநாட்டிலே அந்தப் பஞ்சமும் வரும்படியாக இந்த யுத்தம் செய்துவிட்டது. ஆதலால், உணவுப் பொருள்களில் ஒரு இம்மிகூட வீணுக்காது கண்ணுங் கருத்துமா யிருப்பதோடு, ஓய்வு நேரத்தில் காய் கறி உற்பத்தி செய்ய நீ கொஞ்சம் முயற்சியும் செய்ய வேண்டும்.

உன் வீட்டுக் கொல்லைப்புறம் பெரிதாயிருக்குமே! விசாலமான அந்தக் கொல்லையைக் கொத்திப்போட்டு ஏதேனும் சில காய் கறி விதைகளைத் தெளித்துவைத்தால் என்ன? தினமும் பொழுது போக்காக காலை வேளைகளில் அதற்குத் தண்ணீர் ஊற்றவும், அதற்குக் களையெடுக்கவும், அதைக் கண்டு மகிழவும் எத்தனை உல்லாசமா யிருக்கும்! உன் தோட்டத்திலே காய்த்த காய்கறிகள் என்று நீ பறித்துச் சமையல் செய்தால், அதன் ருசியே அலாதி இனிமையுடன் இருக்குமல்லவா?

இன்னும் இந்த யுத்தகாலத்திலே நீ செய்யக்கூடிய செயல்கள் பல உண்டு. இன்னெரு முறை எழுதுகிறேன்.

உனது அன்புள்ள,

சிவகாமி.

"இது, முதல் முதலாக, புரட்சித் தொழிலாளியின் சித்திரத்தை எடுத்துக் காட்டிய ருஷிய நாடகம். இப்படிப்பட்ட தொழிலாளிகள்தான், பின்னால் சோவியத் சபைகளில் பிரதான அந்தஸ்தை வகித்தார்கள்.

—ஐல்மர் மௌட்.

# மூல காரணம்

(லியோ டால்ஸ்டாய்)



நாடக பாத்திரங்கள்.

**அகூலினா:**—எழுபது வயதுள்ள கிழவி. சுறுசுறுப்பும், அந்தஸ்தும், பழங்காலப் பழக்க வழக்கங்களும் உடையவள்.

**மைக்கேல்:**— அவளுடைய மகன். முப்பத்து ஐந்து வயது. விறுவிறுப்பும், தன்னலமும், தைரியமும் உடையவன்.

**மார்த்தா:**— அவனுடைய நாட்டுப்பெண். முப்பத்து இரண்டு வயது. முணுமுணுத்துக்கொண்டே இருப்பாள். வேகமாகவும் அதிகமாகவும் பேசுவாள்.

**பராஷ்கா:**— மைக்கேலுக்கும் மார்த்தாவுக்கும் பிறந்த ஒரு பத்து வயதுப் பெண்.

**தாராஸ்:**— கிராமத் தலைவனுடைய உதவி உத்தியோகஸ்தன்; சுயநலமி. சாவகாசமாகப் பேசுவான்.

**ஒரு பிரயாணி:**— நாற்பது வயது. அமைதியில்லாதவன். மெலிந்த சரீரி. பெரிய பெரிய வார்த்தைகள் போட்டுப் பேசுவான். குடித்துவிட்டு இருக்கும்போது ஹாய்யாக இருப்பான்.

**இக்னத்:**— நாற்பது வயது நிறைந்த ஒரு தமாஷ் பேர்வழி; ...ட்டாள்.

**பக்கத்து வீட்டுக்காரன்:**— நாற்பது வயது நிரம்பியவன். ஓய்வு ...வு இல்லாதவன்.

## அங்கம். 1.

[இலையுதிர் காலம். ஒரு விவசாயியினுடைய குடிசையில் தடுக்குவைத்து மறைக்கப்பட்ட ஒரு சிறு அறை அகூலினா உட்கார்ந்து நூல் நூற்கிறாள்; மார்த்தா ரொட்டி தயார் செய்து கொண்டு இருக்கிறாள்; சின்ன பராஷ்கா தொட்டில் ஆட்டிக் கொண்டு இருக்கிறாள்.]

மார்த்தா:— என் மனதுக்குத் துயரமும் தொந்தரவுமாய் இருக்கிறது. அவருக்கு அங்கே ஒரு ஜோலியும் இல்லை. அன்று, பட்டணத்துக்கு விறகு விற்கப் போனபோது ஏறக்குறைய

---

கு. அழகிரிசாமி மொழி பெயர்த்தது.

பாதிக் காசைக் குடித்துத் தொலைத்த மாதிரித்தான் செய்திருப்பார். பிறகு, எடுத்ததற்கெல்லாம் என்னையே குற்றம் சாட்டுகிறார்.

அகுலிநா:— தொந்தரவு எதற்கு? இன்னும் நேரம் கிடைக்கிறதே, பட்டணம் வெகு தூரத்தில் இருக்கிறது. இப்போதைக்கு...

மார்:— நேரம் கிடைக்கிறது என்று என்ன அர்த்தத்தில் சொல்லுகிறீர்கள்? அக்கிமிச் அப்பொழுதே வந்துவிட்டான். மைக்கேல் போனதற்கு அப்புறம்தான் அவன் போனான். ஆனால் மைக்கேல் இன்னும் திரும்பி வரவில்லை. தொந்தரவுதான். நாள் பூராவும் தொந்தரவுதான். இதுதான் நமக்குச் சந்தோஷம்.

அகு:—அக்கிமிச் சுமையைத் தூக்கிக் கொண்டு நேராக வாடிக்கைக்காரனிடம் போகிறான். ஆனால், மைக்கேல் சந்தைக்குப் போய் விற்கவேண்டியிருக்கிறது.

மார்:—அவர் தனியாகப் போயிருந்தால் எனக்கு வருத்தம் ஒன்றும் இல்லை. ஆனால், இக்னாத்தும் கூடப் போயிருக்கிறான். அந்த அழுக்குப்பிடித்த நாயோடு போனால் அவர் நிச்சயமாய்க் குடிப்பார். நமக்கோ இரவும் பகலும் வேலை செய்யவேண்டியது கட்டமை. அப்படியிருந்தும் அந்த வேலையினால் ஏதாவது பிரயோஜனமா என்றால் அதுதான் கிடையாது. பொழுதெல்லாம் ஓடி ஓடி உழைத்ததுதான் நாம் கண்ட பலன்.

[கதவு திறக்கிறது. அள்ளு கந்தலை உடுத்திக்கொண்டிருக்கும் ஒரு பிரயாணியை தாராஸ் அழைத்து வருகிறான்.]

தாராஸ்:—எல்லோருக்கும் நமஸ்காரம்! ஒரு ஆளை அழைத்துக்கொண்டு வந்திருக்கிறேன்.* அவனுக்கு இராத்திரி தங்குவதற்கு இடம் வேண்டும்.

பிரயாணி:—[தலை குனிந்து] எல்லோருக்கும் என் வணக்கம்.

மார்:—அடிக்கடி எங்களிடமே ஏன் அழைத்துக்கொண்டு வருகிறீர்கள்? போன புதன்கிழமை இரவுதான் ஒரு பிரயாணியை அமர்த்திவைத்து அனுப்பினோம். அதனால், ஸ்டீபானிதாவை இன்று பராமரித்துக்கொள்ளச் சொல்லுங்கள்; அங்கே குழந்தை குட்டிகளும் இல்லை. எங்களுடைய வீட்டையே நாங்கள் கவனித்துக்கொள்ள முடியாமல் இருக்கும்போது, நீங்கள் இப்படிப்பட்டவர்களை எங்களிடமே எப்போதும் அழைத்து வருகிறீர்கள்.

தாரா:—ஒவ்வொருவரும் முறைப்படி செய்ய வேண்டியது தானே!

மார்:—முறைப்படி செய்யவேண்டும் என்பது நியாயம் தான். ஆனால், எனக்குக் குழந்தையும் குட்டியுமாய் இருக்கிறது. அதோடு, இன்று எங்கள் வீட்டுக்காரரும் இல்லை.

---

* கிராம உத்தியோகஸ்தர்கள், பிரயாணிகளை ஒவ்வொரு விவசாயியின் வீட்டிலும், முறைபோட்டு, சௌகரியத்துக்குத் தக்கவாறு, அமர்த்தி வைப்பது வழக்கம்.

தாரா:—பரவாய் இல்லை. இவன் இராத்திரிக்கு இங்கேயே தூங்கட்டும்; அவன் படுத்திருந்தால் இடம் ஒன்றும் தேய்ந்து போய் விடாது.

அகூ:—[பிரயாணியைப் பார்த்து] உள்ளே வந்து உட்கார். எங்கள் விருந்தினனாக இரு.

பிர:—உங்களுக்கு என் நன்றி, சாத்தியப்பட்டால் எனக்குத் தின்பதற்கு ஏதாவது கொடுங்கள்.

மார்:—முன்னாலேயே நாலுஇடம் சுற்றிச் சாப்பாட்டுக்கு ஏதாவது வழி செய்துகொள்ள உனக்கு நேரம் கிடைக்கவில்லையா? ஊருக்குள்ளே ஏதாவது பிச்சை வாங்கினாயா?

பிர:—[பெருமூச்செறிகிறான்] எனக்குப் பிச்சைவாங்கும் வழக்கம் இல்லை. என் அந்தஸ்து அப்படி. ஆனால், எனக்கு என்று சொத்து சுதந்திரம் ஒன்றும் இல்லாததால்......

[அகூலினா எழுந்து மேஜையருகே போய் ஒரு ரொட்டியை எடுத்து, அதில் ஒரு துண்டை வெட்டி பிரயாணிக்குக் கொண்டு வந்து கொடுக்கிறாள்.]

பிர:—[ரொட்டியைப் பெற்றுக்கொண்டு] மெர்ஸீ* [உட்கார்ந்து ஆவலோடு சாப்பிடுகிறான்.]

தாரா:—மைக்கேல் எங்கே?

மார்:—ஏன்? பட்டணத்துக்கு வைக்கோல் விற்கப் போயிருக்கிறார். இப்பொழுது அவர் திரும்பிவருகிற நேரந்தான். ஆனால் அங்கே ஏதாவது நடந்திருக்கும்.

தாரா:—ஏன்? என்ன நடக்கவேண்டும்?

மார்:—நல்ல காரியம் என்ன நடந்திருக்கப் போகிறது? ஏதாவது வினைக்குத்தான். வீட்டைவிட்டு வெளியே போனதும் அவர் தான் எங்களை முற்றிலும் மறந்து விடுகிறாரே! நன்றாகக் குடித்து விட்டு போதைவெறியிலே வீடு திரும்புவார் என்று நினைக்கிறேன்.

அகூ:—[நூல் நூற்பதற்காக உட்கார்ந்துகொண்டு மார்த்தாவைச் சுட்டிக்காட்டி தாராஸிடம் சொல்லுகிறாள்] சும்மா இருக்கிற வழக்கமே அவளுக்குக் கிடையாது. நான் எப்போதும் சொல்வதுபோல பெண்களாகிய எங்களுக்கு, எதையாவது முணுமுணுத்துக்கொண்டே இருக்க வேண்டும்.

மார்:—அவர் தனியாகப் போயிருந்தால் எனக்கும் பயம் ஒன்றும் இல்லை; ஆனால் இக்னாத்தோடு போயிருக்கிறாரே!

---

* படித்த புரட்சிக் காரர்களுடன் சற்றுப் பழகிய இந்தப் பிரயாணி, சாதாரணத் தொழிலாளர்களுக்குத் தெரியாத அந்நியபாஷைச் சொற்களை உபயோகிக்க முயற்சிக்கிறான். இந்த இடத்தில் சாதாரணமாக 'வந்தனம்' என்று சொல்வதற்குப் பதிலாக 'மெர்ஸீ' என்ற பிரெஞ்சுப் பதத்தை உபயோகிக்கிறான்.

தார்:—[புன்னகை செய்துகொண்டு] ஓஹோ, சரி சரி! இக்னுத்துக்குக் குடியில் கிறுக்குத்தானே!

அக:—இக்னுத் எப்படிப்பட்டவன் என்று அவனுக்குத் தெரியாதா! இக்னுத்தைப்போல நம் மைக்கேலும் ஒரு மனுஷன் தான்.

மார்:—நீங்கள் சொல்வது சரிதான், மாமி, அவர் குடிகாரராய் இருப்பது எனக்குச் சஞ்சலமாய் இருக்கிறது. அவர் சுயபுத்தியோடு இருக்கும்போதே அவரை ஏதாவது குறைசொல்லப் போனால் அது பெருங்குற்றமாய்விடும். ஆனால், குடிவெறியில் இருக்கும்போது அவர் எப்படி இருக்கிறார் என்று உங்களுக்குத் தெரிந்ததுதானே. ஒருவரும் ஒன்றும் சொல்லமுடியாது; எல்லாம் குற்றமாய்விடும்.

தாரா:—அது சரிதான்; ஆனால் நீங்களும் எப்படி! ஒருவன் கொஞ்சம் குடித்துவிட்டு ஏதாவது இரண்டு புலம்புகிறான் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்புறம் கொஞ்சநேரம் போனால் எல்லாம் சரியாய்ப்போய் விடுகிறது. ஆனால், நீங்களோ பிறகு, அவனை வெடுவெடுத்துக்கொண்டே இருக்கிறீர்கள்.

மார்:—அவர் குடிவெறியில் இருக்கும்போது சந்தோஷம் என்பதே கிடையாது.

தாரா:—ஆனால் ஏகதேசமாகவாவது கொஞ்சம் குடிக்காமல் எங்களால் இருக்க முடியாது என்பதை நினைத்துக்கொள்ளுங்கள். பெண்களாகிய நீங்கள் வீட்டிலேயே இருக்கிறீர்கள்; நாங்களோ வேலையில் இருக்கும்போது, அல்லது நாலு சிநேகிதர்களுக்காகவாவது குடிக்கத்தான் வேண்டியதிருக்கிறது: அது சரி, ஒருவன் குடிக்கிறான் என்று வைத்துக்கொள்வோம்; அதனால் என்ன தீங்கு இருக்கிறது?

மார்:—உங்களுக்கு என்ன! பேசுவீர்கள்; அந்தக் கஷ்டம் எங்களுக்கு அல்லவா தெரியும்? ஐயோ, அதனால் எவ்வளவு கஷ்டம்! எங்களுடைய வேலையை ஒரு வாரத்துக்கு உங்கள் கழுத்தில் கட்டினால் அப்புறம் சொல்லுவீர்கள்! மா பிசைய, சமையல் செய்ய, ரொட்டி சுட, நூல் நூற்க, நெசவு நெய்ய, மாடு கன்றுகளைப் பார்த்துக்கொள்ள, குணங்கெட்ட பிள்ளைகளை வைத்துக்கொண்டு அவர்களுக்கு, குளிப்பாட்டி, சோறு ஊட்டிக் காப்பாற்ற, எல்லாம் எங்கள் தலைமேல் விழுந்த பாரம். இதில் ஏதாவது அவருக்குப் பிடிக்காவிட்டால் அவ்வளவுதான்! அதிலும் அவர் குடிவெறியில் இருக்கும்போது பார்க்கவேண்டுமே, ஐயோ! எங்கள் பிழைப்பு என்ன பிழைப்பு!

பிர:—[வாயை மென்று கொண்டே] நீங்கள் சொல்வது ரொம்ப சரி, எல்லாவற்றிற்கும் காரணம் அதுதான்; அதாவது வாழ்க்கையின் பெருங்கேடுகள் எல்லாம் அந்தக் குடியிலிருந்து தான் ஆரம்பிக்கின்றன.

தாரா:—அந்தக் குடி உன்னையுங்கூட பிடித்து ஆட்டிவிட்டது போல் இருக்கிறதே!

பிர:—இல்லை; இல்லை. நானும் சீரழிந்திருக்கிறேன் என்றாலும் அதனால் தான் என்று சொல்லிவிட முடியாது; குடிக்காவிட்டால் என் வாழ்க்கையே வேறொரு மாதிரி ஆயிருக்கும்.

தாரா:—அப்படியானால், காரணத்தோடு குடித்தால் கெடுதல் இல்லை; அப்படித்தானே?

பிர:—ஆனால், மனிதனை முற்றிலும் பாழாக்கிவிடக்கூடிய ஒரு சக்தி அதிலே இருக்கிறது.

மார்:—அதுதான் நான் சொன்னது; நீங்களே உங்களைக் கெடுத்துக் கொண்டு, கேவலத்துக்கு உள்ளாகி நாய் படாத பாடு படுகிறீர்கள் அல்லவா!

பிர:—அதுமட்டும் இல்லை. சில ஜனங்கள் இருக்கிறார்கள்; அதாவது சில ஆட்கள், இந்தக் குடியினாலேயே தங்கள் அறிவை எல்லாம் இழந்து, தகாத செயல்களை எல்லாம் செய்கிறார்கள். அப்படிப்பட்ட ஒருவனுக்கு அவன் குடிக்காமல் இருக்கும்போது நீங்கள் இஷ்டப்பட்டது எதையாவது கொடுங்கள்; அப்போது தனக்குச் சொந்தமில்லாததை அவன் வாங்கிக்கொள்ளமாட்டான். ஆனால் குடித்திருக்கும்போதோ கைக்குக் கிடைத்ததை எல்லாம் அமுக்கிக் கொள்ளுவான், பல தடவைகளும் உதைபடுவான்; ஜெயிலுக்குப் போவான். குடிக்காமல் இருக்குமட்டும் யோக்கியமாகவும் கௌரவமாகவும்தான் இருப்பான். ஆனால், குடித்தமாத்திரத்தில் அகப்பட்டதை எல்லாம் பதுக்கிக் கொள்ளுவான்.

அகூ:—அப்படி நடப்பதும் நடக்காமல் இருப்பதும் அவனவன் கையில் இருக்கிறது. என் அபிப்ராயம் அது தான்.

பிர:—அது சரிதான்; ஒருவன் சுய புத்தியோடு இருக்கும் மட்டும் அவன் கையில்தான் இருக்கிறது. ஆனால் இது ஒரு வியாதியாயிற்றே?

தாரா:—ஒரு மாதிரி வியாதிதான். சரியானபடி உதை கொடுத்தால்தான் இந்த வியாதி குணமாகும். சரி நான் போய்விட்டு வருகிறேன் [வெளியே போகிறான். மார்த்தா தன் கைகளைத் துடைத்துக்கொண்டு அடுத்த பக்கம் செல்வதற்காகத் திரும்புகிறாள்.]

அகூ.—[பிரயாணி ரொட்டி எல்லாம் தின்றுவிட்டதைப் பார்த்து] மார்த்தா! மார்த்தா! அவனுக்கு இன்னொரு ரொட்டித் துண்டு கொடு.

மார்:—நாசமாய்ப்போச்சு! நான் டீ போட்டப் போகவேண்டும். [வெளியே செல்கிறாள்.]

[அகூலினா எழுந்து மேஜையண்டை போய் ஒரு ரொட்டித் துண்டை வெட்டிக் கொண்டுவந்து பிரயாணி கையில் கொடுக்கிறாள்.]

பிர:—மெர்ஸீ, எனக்கு ரொம்பப் பசி.

அகூ:—நீ ஒரு தொழிலாளியா?

பிர:—யார்? நானா? நான் ஒரு என்ஜின்—டிரைவர்.

அகூ:—என்ன சம்பளம் வாங்கிக்கொண்டு இருந்தாய்?

பிர:—மாதம் ஐம்பது ரூபிள்; * எழுபது ரூபிள்கூட வாங்கிக்கொண்டு இருந்தேன்.

அகூ:—அதுதான் நல்ல சம்பளமாச்சே! அப்படியிருக்க, இவ்வளவு கீழான நிலைமைக்கு எப்படி வந்து விட்டாய்?

பிர:—கீழ்நிலைக்கு வந்ததா! நான் ஒருவன்மாத்திரம் அல்ல இப்படியானது! யோக்கியமான மனிதன் வாழ்வதற்கு இது காலமில்லாமல் போகப்போய்தான் நான் இப்படியானது!

மார்:—[தேநீர் கொண்டு வருகிறாள்] அவர் கட்டாயம் குடித்துவிட்டுத்தான் வீடுவந்து சேருவார். எனக்கு அப்படித்தான் தோன்றுகிறது.

அகூ:—குடித்துப் போதையேறிப் போய் இருப்பான் என்பதை நினைக்க எனக்குப் பயமாய் இருக்கிறது.

மார்:—அதுதான் நான் உழைத்து உழைத்துப் பாழாய்ப் போகிறேன். எல்லாம் என் தலைமேல் விடிந்திருக்கிறது. [தொட்டிலில் குழந்தை அழுகிறது] பராஷ்கா, தொட்டிலை ஆட்டு. பெண்களுடைய பிழைப்பு என்ன பிழைப்பு! அவர் குடித்திருந்தால், ஒன்றுமே சரிப்படாது......என்ன சொன்னாலும் அவருக்குப் பிடிக்காது......

அகூ:—[தேநீர் தயார் செய்துகொண்டே] இதுதான் கடைசித்தேயிலை. அவனிடத்திலே கொஞ்சம் தேயிலை வாங்கிக் கொண்டு வரும்படி சொன்னாயா?

மார்:—ஆமாம்; வாங்கிக்கொண்டு வருவதாகத்தான் சொன்னார். ஆனால் எல்லாவற்றையுமே மறந்து போயிருப்பார்!.....

[தேநீர்ப்பாத்திரத்தை மேஜைமீது வைக்கிறாள். பிரயான் எழுந்து போகிறான்.]

அகூ:—ஏன் மேஜையைவிட்டு எழுந்து போகிறாய்? நாம் சாப்பிடப் போகிறோம்.

பிர:—உங்களுடைய நல்லுபசாரத்துக்கு என் நன்றி. [அவன், தான் புகைத்துக்கொண்டிருந்த சிகரெட்டை தூர எறிந்து விட்டு மேஜையின் பக்கம் வருகிறான்.]

மார்:—நீ என்ன குடும்பத்தைச் சேர்ந்தவன்? விவசாயியா, அல்லது வேறேயா?

பிர:—நான் விவசாயியும் அல்ல, பிரபுவும் அல்ல. நான் இரு—ஜாதி.

(தொடரும்.)

---

* ரூபிள்—ஒரு ரஷிய நாணயம். நூறு கோபெக்குகள் கொண்டது ஒரு ரூபிள்.

# தமிழும் தமிழனும்

(கி. பா. அய்யர், எம்.ஏ.,எப்.ஆர்.இ.எஸ். டெல்லி.)



சென்ற தமிழ் இசை மகாநாட்டுத் திறப்புவிழாவன்று ஸர். ஆர். கே. ஷண்முகம் செட்டியார் செய்த பிரசங்கத்தை ஒவ்வொரு தமிழனும் உற்சாகத்துடன் கவனிக்கவேண்டியதேயாகும். அதில் பிரத்தியேகமான பகுதி என்னவெனில்: "உத்தியோகத்திற்காக ஆங்கிலமும், கல்யாணம், சாவு இச்சந்தர்ப்பங்களிற்கான சடங்குகள் நடத்தி வைப்பதற்கான தகுதியடைய சமஸ்கிருதமும், தேசியப் போரில் கலந்துகொள்ள ஹிந்தியும், சங்கீதம் பயில தெலுங்கும் கற்கவேண்டிவந்தால், தமிழ் பாஷைதான் எந்த உபயோகத்திற்கு வரும்?" என்று கேட்டதேயாகும். நம் தமிழர்களில் பெரும்பாலாேனார் நமது பாஷையிலும், நமது நாகரிக முறையிலும் ஒருவித வெறுப்பும் அலட்சியமும் கொண்டுவிட்டனர்.

சிலருக்குத் தங்களைத் தமிழர்கள் என்று சொல்லிக்கொள்வதற்கே வெட்கமாயிருக்கிறது. இரண்டு வருடங்களுக்கு முன் வரையில் நம்மில் சிலரை "உங்களது சொந்த ஊர் யாது?" என்று கேட்டால், "என்னமோ ராமனாதபுரம் சமீபமாம். நான் போனதே கிடையாது. நாங்கள் மெட்ராஸிலும், பங்களூரிலும் தான் இருந்தோம். வில்லேஜ் ஸைட்டுக்கே போனதில்லை" என்று சொல்வது வழக்கமாயிருந்தது. ஆனால் முதன் முதல் சென்னையில் அபாயச் சங்கு ஊதினவுடன் "வில்லேஜ் ஸைடு"களுக்குக் கூட ஒரு மவுஸ் உண்டாகிவிட்டது.

இரண்டு தமிழர்கள் சந்தித்தால் பெரும்பாலும் ஆங்கிலத்திலேயே சம்பாஷணை செய்கின்றனர். ஆனால், வடநாட்டினரோ தங்கள் பாஷையிலின்றி வேறு பாஷையில் பேசுவது வழக்கமில்லை. லண்டன்மாநகரில் வங்காளிகள் ஒருமுறை ஒரு பிரபல வங்காளிப்புக்கு வரவேற்புப் பத்திரகம் வாசித்துக் கொடுத்தார்களாம். அவ்வமயம் அங்கே வீற்றிருந்த அனைவரும் வங்காளி வேஷ்டியும் ஜிப்பாவுமே அணிந்திருந்தனராம். ஆனால், நம்மூரிலோ, ஏதாகிலும் ஒரு தமிழர் சம்பவம் நடந்தால் அருங்கோடையாயிருந்த போதிலும் நிஜார், நெக்டை, பூட்ஸின்றி நம்முள் சில பிரமுகர்களைப் பார்ப்பதரிது.

ஆகார வகைகளில் கூட வடநாட்டிலுள்ள தமிழன் தான் அங்கே ஏகி 2, 3 வருடங்களேயானபோதிலும் தான் பிறந்து வளர்ந்ததே வட இந்தியா போல் "எனக்கு ஸாம்பார், ரசம் ஒன்றும் ஸூட் ஆகாது. ரொட்டி, தர்க்காரிதான் ஒத்துக்கொள்கிறது" என்று ஒரு பெருமையுடன் சொல்கிறான்.

வடநாட்டிலுள்ள தமிழர்களில் சிலருக்கு நம் பாஷை மறந்துவிட்டதென்றே சொல்லலாம். குழந்தைகளுக்கு வீட்டில் தமிழ்

சொல்லிக்கொடுக்காததால் அவர்களுக்கு தமிழ் எழுதவோ, படிக்கவோ தெரியவில்லை. ஆனால் வடநாட்டார் நாம் 50 வருடம் வடநாட்டில் இருந்தாலும் அவர்கள் நம்மை "மதராஸி" அல்லது "மராட்டி" என்று தான் சொல்கிறார்கள்.

அநேக வருடங்களுக்குமுன் வடநாடேகிய ஒரு தமிழர் ஒரு நாள் "இரண்டு நாளாக என் கழுத்து உட்கார்ந்துவிட்டது" என்றார். எனக்கு இன்னதென்று விளங்காததால் ஒரு சிநேகிதரைக் கேட்டதன்பேரில் அவர் "தொண்டைக்கட்டு என்று சொல்கிறார். ஹிந்தியிலுள்ள 'மெரா கலாபைட்கயா' என்பதைத் தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார்" என்று விளக்கினார்.

நம் குழந்தைகளைக்கூட அவர்கள் தாய் தகப்பன்மார் வீட்டில் தமிழில் பேசச் சொல்வதில்லை. ஆங்கிலத்திலோ, ஹிந்தியிலோ பேசினால்தான் கௌரவமென்றெண்ணி அதன்பிரகாரமே குழந்தைகளும் வளர்க்கப்பட்டு வருகின்றன.

நான் சுமார் 12 வருடங்களுக்கு முன் பம்பாயில் ஒரு சர்க்கஸுக்குச் சென்றிருந்தேன். டிக்கட் வாங்குமிடத்தில் நின்று கொண்டு ஆங்கிலத்தில் ஒரு டிக்கட்டுக் கொடுக்கும்படி கேட்டேன்.—நான் விசேஷமாய் ஆங்கிலம் பேசுவதில்லை. அப்பொழுது எனக்கு ஹிந்தி தெரியாததால் அங்ஙனம் செய்யலானேன்.— அதற்கு அவ்விடமிருந்த குமாஸ்தா, "நீர் மதராஸி என்று அறிகிறேன். அவர்கள் தான் தங்கள் மனைவியர்களிடம்கூட ஆங்கிலத்தில் பேசுவார்களாம்" என்றார். இல்லையென்று மறுக்க எனக்கு தைரியம் வரவில்லை. அவர் சொன்னது உண்மைதானே !

ஆனால், மதராஸில் குடியேறியுள்ள குஜராத்தியர்கள், மார்வாரிகள், ஹிந்துஸ்தானியர்கள் இன்னும் பிற மாகாணத்தவர்களைப் பார்க்கிறோம். அவர்களில் பெரும்பாலானோர் தங்கள் பழக்க வழக்கங்களையோ, நடை. உடை, நகை, நாகரிகங்களையோ, உணவு சம்பிரதாயங்களையோ நம்மைப்போல் மாற்றிக் கொள்வதில்லை.

நம்மவர்களோ பெயர்களைக்கூட மாற்றி விடுகின்றனர். சங்கரன் என்பதை ஷங்கர் என்றும் பரமேசுவரன் என்பதை பரமேஷ்வர் என்று மாற்றிவிடுகிறார்கள். பெண்களுக்குப் பெயரிடுவதுகூட மாறிவிட்டது. மகாலட்சுமி, சுந்தரி, கல்யாணி, ஸரஸ்வதி, என்றெல்லாம் போய் ஹன்ஸா, மாதுரி, சீலா, ஸரோஜா, ஸௌதாமினி என்றெல்லாம் வந்துவிட்டது.

சங்கீதத்திலோ தமிழ்ப் பாட்டில்லை என்பது மாத்திரமல்ல; தமிழ்ப்பாட்டுகள் சினிமாக்களில் பாடப்பட்டாலும் அவைகள் பெரும்பாலும் ஹிந்துஸ்தானி மெட்டிலேயே அமைந்துள்ளன. காசியில் 2 வருடங்களுக்கு முன் ஒரு தமிழ்ப்படம் காட்டப்பட்டது. அதில் வந்த கதாநாயகர் பிரபல தமிழ் பாடகர். ஆனால் பாட்டுக்

(328-ம் பக்கம் பார்க்க)

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## (சி. பி. ஆனந்தம்.)



### நெப்டியூன்—வருணன்

**கதிகள்:**—இதற்குத் தன்னைத்தான் சுற்றிக்கொள்ளும் கதி ஒன்று இருப்பதாக வெகுநாளைக்குப்பின் நிபுணர்கள் ஒருவாறு கண்டனர். இந்தக் கதியைக் கணக்கிடுவதற்கு வேண்டிய அடையாளக்குறிக்கு உரியன எதுவும் இதனிடம் நிலையாக வில்லையாயினும், யுரேனஸைப்போல இதனிடம் காணப்பட்டு வரும் பச்சைவண்ணம் ஒரு அளவு ஆதரவாக விருந்தது. சில பொழுது மட்டும் காணப்படும் அந்த வண்ணம் ஒரு கிரமத்தில் காட்சிக்குரியதாக விருத்தலின், அதைக் கொண்டு விடாது ஆராய்ந்து வந்தனர். அதன் பலனாக, இயற்கை விதிகளின்படியுள்ள ஊகத்தை எல்லாக் கொள்கைகளையும் போல இதற்கும் உறுதி செய்தனர். அவ்வழி அது ஒரு தடவை தன்னைத்தான் சுற்றிக்கொள்ள ஆகும் பொழுதை பதினாறு மணி நேர மென்று கணக்கிட்டனர். பரிமாணத்தில் மிகப் பெரிய இக்கோள் யுரேனஸைப் போலவே—ஆனால், சற்று குறைவாக—சுருங்கிய பொழுது தன்னைத்தான் ஒருதடவை சுற்றிக்கொண்டு விடுகிறது,

### ஒளியும் உஷ்ணமும்

நெட்டியூன் தான் சூர்ய குடும்பத்தில அல்லது சூர்ய மண்டலத்தில் கடைசியான கோள் என்று நிச்சயிக்கப்பட்டிருந்தது. இது சூர்ய மண்டலத்தின் எல்லையை வரையறுக்கும்படி தன் சுற்று வீதியை எல்லாக் கோள்களுக்கும் அப்பால் இறுதியிற் கொண்டிருப்பதனால், இதன் சுற்று வீதியே சூர்யமண்டலத்தின் எல்லையென மதித்தனர். ஆனால், இந்த நூற்றாண்டில் — இற்றைக்கு பதினைந்து ஆண்டுகள் முன் இந்த நெப்டியூனுக்கு அப்பாலும் ஒரு நூதனக் கோளைக் கண்டுவிட்டனர். இன்னும் எதிர்காலத்தில் எத்தனை கோள்கள் கண்டு பிடிக்கப்படுமோ அறியோம். எனவே, சூர்ய மண்டலத்தின் எல்லையை இவ்வளவு தான் என்று நிர்ணயித்து விடுவது சாத்தியமில்லை.

இதுவரை கண்ட மற்ற எல்லாக் கிரகங்களைக் காட்டிலும் அதிகமாக சூர்யனிலிருந்து வெகுதூரத்தில் இருக்கிறது நெப்டியூன். நமக்கு சுக்ரன் எந்த பரிமாணத்தில் காட்சிக்குரியதாக விருக்கிறதோ, அவ்வளவு சிறிய பரிமாணத்தில்தான் இந்தக் கிரகத்திற்கும் சூர்யனுடைய காட்சிப் பரிமாணம் இருக்கிறதாம். சுக்ரன் பூமிக்கு வீசுகிற ஒளியைப் போல் மூன்று லட்சம் மடங்கு அதிகமான ஒளி சூர்யனிலிருந்து இக்கிரகத்திற்கு கிடைத்து வருகிறது. ஆயினும், அவ் ஒளியினால் அதற்குக் கிடைக்கும் உஷ்ணம், சூர்யனிலிருந்து பூமிக்குக் கிடைப்பதினும் ஆயிரத்தில் ஒரு கூறுதான்.

**பால் மதிகள்:**—இக்கோளுக்கு அதனைச் சுற்றி ஓடும் **பால்மதி** (உபக்கிரகம்) ஒன்று இருப்பதாக இதுவரையும் கண்டிருக்கிறார்கள். மேலும் பல இருக்கக் கூடுமெனக் கருதுகின்றனர்.

**தூமகேதுக்கள்:**—இதன் ஆதிக்கத்தினுள் அடங்கியுள்ள தூமகேதுக்கள் பல இருக்கின்றனவாம். இன்றைய நிபுணர்கள் இதன் ஆதிக்கத்துள் அடங்குவன ஏழு தூமகேதுக்கள் என்கின்றனர். இவ் ஏழுட்னும் சேராத ஒன்று—நெப்டியூனின் ஆட்சியுள் வரும் ஒன்று மிகவும் குறிப்பிடத்தக்கது. அது 1910-ம் வருஷத்தில் சில பொழுது பூமிக்குக் காட்சிக்குரியதாக விருந்தது. அக்காலத்திலுள்ளவர்கள் எல்லோரும் அதன் காட்சியைக் கண்டிருக்கின்றனர். சில வாரங்கள் ஒவ்வொரு வைகறையிலும் கிழக்கு அடிவானில் நீண்ட வாலுடன் ஒளி வீசிக்கொண்டிருந்து பின்பு அது மறைந்தது. அதற்கு 'ஹொர்லீஸ்' என்று மேலைப் புலவர்கள் பெயர் தந்தனர். அவ்விதம் சமீபத்தில்—இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் காட்சிக் குரியதாயிருந்து நிபுணர்களுடைய முக்கிய கவனத்தையும் பெற்றுவிட்ட அத்தூமகேது நெப்டியூனின் ஆட்சியுள் அடங்கியதாகும்.

---

(326-ம் பக்கத் தொடர்ச்சி)

கள் எல்லாம் ஹிந்துஸ்தானி மெட்டன்றி வேறு மெட்டுக்களில் அமைக்கப்படவே இல்லை. எனதருகில் உட்கார்ந்திருந்த கொட்டகை முதளாளி வங்காளி, "என்ன ஐயா, உங்களுக்கு என்று தனி ராகம், மெட்டுகள் கிடையாதா? ஆரம்பம் முதல் ஸைகால், கே. ஸி. டே இவர்கள் பாடும் மெட்டிலல்லவே உங்கள் பிரபல பாடகர் பாடுகிறார். பூ இதுதான் தமிழ சங்கீதம்?" என்று என்னைக் கேட்டார். கேட்டதில் என்ன பிசகு?

இது மாத்திரமல்ல; தமிழ் நாட்டில் எவ்வளவோ தமிழ் பத்திரிகைகள் இருந்துவருகின்றன. சிலவற்றில் வரும் தொடர்கதைகள் பெரும்பாலும் ஹிந்தி, வங்காளி முதலிய பாஷைகளிலுள்ள கதைகளினின்றும் மொழிபெயர்க்கப்பட்டவையே. ஏன் தமிழ் நாட்டில் ரஸமுள்ள கதைகள், வியாசங்கள் எழுதத் திறமையுள்ள எழுத்தாளர்களில்லையா? சாமானியக் கதையாயிருந்தாலும் "சரத் சந்திரரின்" ஏதோ ஒரு கதையைத் தழுவி எழுதப்பட்டதென்றால தான் ஒரு பெருமைபோலும். அன்னிய பாஷைகளிலுள்ள உயர்தரக் கதைகள், காவியங்களெல்லாம் மொழிபெயர்க்க வேண்டிய தவசியமேயாகிலும், எல்லாவற்றிலும் அந்நிய பாஷைகளிலிருந்து கடன் வாங்கியே நடத்தவேண்டுமென்பது நமது பாஷையை அவமதிப்பதுபோல் அல்லவா ஆகின்றது?

தமிழ் இசை மகாநாட்டில் கலந்துள்ள பிரமுகர்களெல்லாம் அன்னிய பாஷைகளிலோ சங்கீதத்திலோ பிரசித்திபெற்றவர்கள். இவர்கள் செய்துவரும் தொண்டின் பயனாக, இனித் தமிழன் பாஷைக்கும் நாகரிகத்திற்கு முண்டான கௌரவத்தைக் கொடுப்பானென்றே நம்புகிறோம்.

# விஞ்ஞான வெள்ளம்

(டி. பி. நவநீத கிருஷ்ணன், M. A.)



**ம**ந்திரக்றகள் மட்டுமே வணிகப் பண்டங்களா யிருந்த போது, கால் நடைப் பிரயாணமும் தலைச்சுமைப் பண்டமேற்று முறையும் போதுமானதா யிருந்தது. ஆனால், பெருவாரியான உலோகக் கற்களையும் உணவுப் பண்டங்களையும் ஓரிடமிருந்து மற்றோரிடம் அனுப்பவேண்டிய காலம் நேர்ந்தபோது மேற்கூறிய வகைகள் போதாதாயின. இப்பொழுது ஏற்பட்ட பெருவாரியான வர்த்தகப் பெருக்கமுறை நடை ஏறுதற்கு, வலிமை மிக்க ஏற்றுச் சாதனங்கள் அவசியமாயின. மக்களது உடல் வலிமை, பல பிராணிகளின் உடல் வலிமையை விடக் குறைவானது. இயற்கை நிகழ்ச்சிகள் பலவற்றின் பாற்பட்ட வலிமை மக்களது வலிமையை விட பன்மடங் கதிகமானது. குறைந்ததான மக்கள் வலிமையைக் கொண்டு, பெருவாரியாய்ப் பொருள்களை அங்கு மிங்கும் அனுப்பி, வியாபாரத்தைப் பெருக்க இயலாது. எனவே, சக்தி வாய்ந்த விலங்குகளின் வலிமையையும் இயற்கை நிகழ்ச்சிகளின் பாற்பட்ட வலிமை மிகுதியையும், தாம் விரும்பிய வகைகளில் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற எண்ணம் எழுந்தது. வர்த்தக வளர்ச்சி கைக்கூடுதற்கான வழிகளைக் கண்டு பிடித்தல் இன்றியமையாதது என ஏற்பட்டது. இவ்வாறெழுந்த தேவையால் தூண்டப்பட்டு, மக்கள், அவ்வழிகளைக் கண்டுபிடித்தனர். முதலில், தாம் வளர்த்து வந்த பிராணிகளை பொதி சுமக்கச் செய்து, பயன் படுத்தினர். பின்னர், சுமைகளைத் தூக்கிச் செல்வதைவிட, இழுத்துச் செல்லல் எளிது எனக் கண்டனர். உருளைகள் மிகவும் பிற்காலத்திலேயே கண்டு பிடிக்கப்பட்டன. முதலில் ஏற்பட்ட வண்டிகள், காலில்லாது உராய்ந்து செல்லும் சறுக்கு வண்டிகளே. மக்கள், தாமும் விலங்குகளின் மீதேறிச் சவாரி செய்வதாலும், வண்டிகளில் செல்வதாலும், நடைப் பிரயாணத்தினால் ஏற்படும் களைப்பிற் குள்ளாகாதவாறு தப்பலாம் எனக் கண்டனர். நீரில் செல்லக்கூடிய படகுகளையும், மரக்கலங்களையும் செய்யலாயினர். காற்றின் வலிமையால் மரக்கலங்களை செலுத்தப்படுதற்கான வகையில், பாய்மரக் கப்பல்களைக் கட்டினர். இவ் வகையாய், இயற்கை நிகழ்ச்சிகளின் வலிமையை தம் வேலைகளுக்குப் பயன்படுத்திக் கொண்டனர். சக்கரங்கள் கண்டு பிடிக்கப்பட்ட பின், இழுத்துச் செல்லும் வகைகள், நன்முறையில் திருந்தின. கி. மு. 3500-ம் ஆண்டில் வரையப்பட்டதென அறியப்பட்ட படமொன்றினின்று, சுமேரியாநாட்டில், அக்காலத்தே, சக்கரங்கள் வழக்கத்திலிருந்தன எனக் காணப்படுகின்றது. கி. மு. 1600-ம் ஆண்டிற்குப் பின்னரே, எகிப்து நாட்டில் சக்கரம் கொண்ட வண்டிகள் தோன்றின. இங்ஙனம் கலத்

திலும் கரலினும் செல்வதற்கும், பண்டங்களை ஏற்றுவதற்குமான வகைகள் மேம்பட்டலாயின. மக்கள், தம் வலிமையேயன்றி, வேறு பலவற்றின் வலிமையைக் கொண்டும் தம் பணிகளை யாற்றும் வழிகளைக் கண்டு பிடித்தனர். இயற்கை நிகழ்ச்சிகளின் வலிமையையும், இதர பிராணிகளின் வலிமையையும், தம் வேலைகளைச் செய்தற்கான வகையில் பயன் படுமாறு செய்தல், 'வலிமையைப் பூட்டல்' (ஹார்னெஸிங் பவர்) எனப் படுகின்றது. வலிமையைப் பூட்டுதற்கான வகைகளை அறிந்ததால் பெறவியன்ற வலிமை மக்கள், தம்மினின்றே பெற வியன்ற வலிமை விடப் பன்மடங்கதிகமானது. அதை, அவர்கள் தம் அறிவுத் தேர்ச்சியாலும், வினைப் பயிற்சியாலும் பெற்றனர். வினை செய்வகைகள் பாற்பட்ட அறிவே விஞ்ஞானம். எனவே, விஞ்ஞானத்தின் துணையால், மக்கள், தம் வேலைகளைச் செய்தற்காக அடைய வியன்ற வலிமையைப் பெருக்கிக் கொண்டனர்; விஞ்ஞானம் வலிவுற்றது.

வேளாண்மை மேலும் மேலும் வலுத்து வந்ததால், அத் தொழில் பாற்பட்ட வினை வகைகளும் அதிகமாய்க்கொண்டே வந்தன. வினை வகைகள் பலவாறுனமையின், வேளாண்மைக்கான உழைப்பும் அதிகமாயிற்று. அதிகப்பட்ட உழைப்பிற்கு, அதிகமான வேலை தேவையாகின்றது. அவ்வேலைகளை, மக்கள், தம் வலிமையைக் கொண்டு செய்வதுடன் நில்லாது, வேறு பிராணிகளின் வலிமைத் திறனையும் அவ் வேலைகளைச் செய்யப் பயன்படுமாறு செய்தற்கான வழிகளைத் தேடினர். அதாவது, வேளாண்மையியலான வேலைகளைச் செய்தற்கென, மற்ற பிராணிகளின் வலிமையைப் பூட்டும் வகைகளை அறிய முற்பட்டனர். அம் முயற்சியும் ஈடேறியது. மாடுகள் பூட்டப்பட்டு இழுக்கப்படும் கலப்பைகள் கண்டு பிடிக்கப்பட்டன. உழவுத்தொழில் பிறந்தது. நிலத்தை உழுது பயிரிடுவதால், கொத்திப் பயிரிடுவதால் பெறப் படுவதை விட அதிகமான விளைவைப் பெறலாம். கொத்துவதற்கான உழைப்பை விட உழுதற்கான உழைப்பு, குறைவு. உழுதல் கொத்துதலைவிட விரைவானது. அதாவது, குறித்த காலத்திற்குள், கொத்தி முடிக்க வியன்ற நிலப்பரப்பைவிட அதிகமான நிலப்பரப்பை, அதே கால அளவில், உழுது முடிக்கலாம். இதனால், பலர் செய்து வந்த வேலையை அவர்கள் அதைச் செய்து முடித்தற்கு ஆன பொழுதிலேயே, ஒருவன் செய்து முடிக்க இயன்றது. இவற்றால், பயிர்த்தொழிலின் வளம் பெருகியது. சிறு சிறு புலங்கள் மறைந்து, பெரும் வயல்கள் பரவின. பயிர்த்தொழில் முறையில், உழுதலே முக்கியமாகி, அத் தொழில் முறை, உழவுத் தொழில் எனச் சிறப்புற்றது. உழவுத்தொழில் எழுந்தபின், சாகுபடி செய்யப்பட்ட நிலங்களும் அதிகமாயின. அவற்றின் விளைவும் மிகைப்பட்டது. இவ் விளைவால் உணவுப் பொருள்கள் மிகுதியாயின. உணவுப் பொருள்களின் மிகுதி, பெருந்தொகையான மக்கள் உண்டு வாழ்வதற்கு இடங் கொடுத்தது. மக்கள் தொகை பெருக்கமடைதற்கான ஏது ஏற்பட்டது.

உழவுத்தொழிலின் பாற்பட்ட வினை செய்வகைகள் மேலும் பல வாயின. அவற்றில் சில, எளிதாயின்றி பின்னலானவை யாயும் ஏற்பட்டன. சீதோஷ்ண நிலைமையையும், பருவ காலங்களையும் பற்றின தேர்ந்த அறிவு தேவையாயிற்று. ஒவ்வொரு பருவ காலத்தைப்பற்றியும் நன்கு அறிய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஒவ்வொரு பருவ காலத்திலும், மாதத்திற்கு மாதமும், நாளுக்கு நாளும், ஏற்படும் மாறுதல்களைப் பற்றித் தெளிவாய்த் தெரிந்து கொள்வதால், பலனுண்டு எனக் காணப்பட்டது. இவ் வகையில், ஓராண்டிலுள்ள நாட்களின் தன்மைகளைப் பற்றிக் குறிக்கப்பட்டுள்ள பட்டியல் ஒன்றின் தேவை ஏற்பட்டது. அப்பட்டியலும் தயாராயிற்று. கணிக்கப்பட்ட பஞ்சாங்கமாய் அது வெளியிடப்பட்டது. கி. மு. 4236-ம் ஆண்டில் எகிப்து நாட்டில் வெளியிடப்பட்ட பஞ்சாங்கம் மக்கள் உற்பத்தி நூல் அறிஞருக்குக் கிடைத்துள்ளது.

பயிர்த்தொழில்-உழவுத்தொழில்-பிரயாணிகளை • வளர்த்தல்-உலோகக் கற்களை உருக்கும் தொழில்-நாவாய்க்கலை-சக்கிரவியல் அல்லது தேர்க்கலை-என்பவை யெல்லாம், கி. மு. 6000-ம் ஆண்டிற்கும், கி. மு. 3000-ம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் கண்டு பிடிக்கப்பட்டன. அவை, உயிர் நூல்-இயைபு நூல்-பூத நூல்-என்ற விஞ்ஞான நூல்களின் பாற்பட்ட மூலக் கருத்துக்களில் பலவற்றை அடிப்படையாய்க் கொண்டவை. எனவே, அத் தொழின் முறைகளில் தேர்ச்சி யுற்றவர், அம் மூலக் கருத்துக்களை அறிந்தவராகவே யிருந்திருக்க வேண்டும். இவ் வகையாய் ஏற்பட்ட விஞ்ஞான வெள்ளம் போன்ற மற்றொரு பெருக்கம் அக்காலத்திற்குப் பின், கி. பி. பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை ஏற்படவில்லை. அந் நூற்றாண்டிற்குப் பின், விஞ்ஞானம் புது வழிகளில் விரிந்தது. முற்காலத்து மக்கள் உழவுத் தொழிலையும், உலோகத் தொழிலையும். வலிமையைப் பூட்டும் வகைகளையும் கண்டு பிடித்தபோது, கண்ட கற்பனைக் கனவுகளைப்போலவே, தற்காலத்து விஞ்ஞான விரிவைக் கண்டு, நாமும் கற்பனைக் காட்சிகளை அக்கண்ணால் காண்கின்றோம். அக் காலத்தவர், அறிவுச் சிறப்பாலும், தொழிற் தேர்ச்சியாலும், வாழ்க்கைவளம் ஏற்படும் எனக் கற்பனைக் கோட்டைகள் கட்டினர். ஆனால், கீழ்த்தரமான கற்பனை மூட்டிய மந்திரம், உயர் வகையான கற்பனையால் எழுந்த விளைவுகள் எல்லா மக்களுக்கும் பொதுவாய்ப் பயன் படாதவாறு செய்தது. அம் மந்திரமே இற்றை வாழ்க்கையிலும் தலையிடுகின்றது. அதை யோட்ட, இக் காலத்து விரிந்த விஞ்ஞானத்தின் வலிமை போதுமா?

---

# காதலும் கடமையும்

("ஸாகன்")



ஆனந்தகரமான அதிகாலை. உதயபுரி ஒரே குதூகலமாய் விளங்கியது. எங்கும் மங்கள வாத்தியங்கள் முழங்கின. தெருக்கள் எல்லாம் மகரதோரணங்களால் அலங்கரிக்கப்பட்டு சுத்தமாயும் மனோஹரமாயும் விளங்கின. ஆட்வர்களும் பெண்டிர்களும் தங்களை அழகாக உடுத்திக்கொண்டு உல்லாஸமாய் உலவிக்கொண்டிருந்தனர். எங்கும் ஒரே கலகலப்பே குடிகொண்டிருந்தது.

இதற்கெல்லாம் காரணம் போர்முனையிலிருந்து கிடைத்த நற்செய்தியே. தர்மத்தையும் தாய்நாட்டையும் காக்க முகமதியர்களுடன் அவர்கள் முறுக்கிவந்த போரில் இறுதியாக வெற்றியடைந்துவிட்டனர். இந்த உன்னதமான வெற்றிக்குக் காரணம் ஸேனாதிபதி குமார ஸிம்ஹனே! அவன் இச்சுபமுகூர்த்தத்தில் நகரப்பிரவேஸம் செய்யப்போகிறான். அவனை அரசரே நேரில் சென்று வரவேற்றுக் கௌரவிக்கப்போகிறார்.

சற்று நேரத்திற்கெல்லாம் பெருத்த ஆரவாரம் கிளம்பியது. வரிசை வரிசையாக குதிரைவீரர்கள்! கடலிரைச்சல்போல் வாத்திய ஒலிகள்! போர்வீரர்களுக்குப் பின் ஒரு யானையின் மீது 'இடியேறு' போலக் கம்பீரமாய் அமர்ந்திருக்கின்றான் குமார ஸிம்மன். பக்கத்தில் அலங்கரிக்கப்பட்ட பட்டத்து யானை. அதில் மஹாராணா பீமஸிம்மன்!

அரண்மனையின் மேல்மாடத்தில் வெகுநேரமாகத் தன் தோழிகள் சூழக் காத்துக் கொண்டிருந்தாள் ராஜகுமாரி. ஊர்வலம் ராஜவீதிக்கு வந்துவிட்டது! அப்பா! அவள் ஆவல்தான் என்ன! அவள் கருவிழிகள்—கூர் அம்புகளா அவை? அப்பெருங்கூட்டத்தைத் துளைத்துக்கொண்டு அப்படிப் பாய்கின்றனவே!

ஊர்வலம் ராஜமாளிகையை அடைந்தது. குமாரஸிம்மன் மேல்மாடத்தை நோக்கினான்! அது தற்செயலாக அல்ல. அச்சமயத்தை எதிர்நோக்கி எப்படித் தவித்தான் தெரியுமா? அவள் கண்கள்—அவன் கண்களைச் சந்தித்துவிட்டன. உடனே அவள் உடல் 'குப்'பென்று வியர்த்துக் கொட்டிற்று. அவள் 'பரபர'வென்று ஓடி மறைந்தாள். அவன் ஸ்மரணை தப்பி உட்கார்ந்திருந்தான்.

அவனுக்கு எவ்வளவு உபசாரங்கள்! எத்தனை பரிசுகள்! அவனை க்ஷேமம் விசாரித்து அவன் வெற்றிக்குத் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்ளும் நண்பர்களுக்குத்தான் கணக்குண்டா? அப்பப்பா? அந்த சண்டையில் போகாத அவன் பிராணன் இந்த உபசரிப்பில் போய்விடும்போலிருந்தது.

குமாருக்கு 'இருப்பு'க்கொள்ளவில்லை. இந்தக் கட்டினின்று நீங்கி அவளைக் காண்ப தெப்போ என ஏங்கினன். ஆனால் விருந்து, நடனம் என்றெல்லாம் அவர்கள் காரியத்தை வளர்த்திக் கொண்டே போனார்கள்.

## 2

நீண்ட தனது பிரயாணத்தை முடித்துக்கொண்டு ஸூர்யன் மேற்குக் கடலில் ஆழ்ந்தான். எஞ்சி நின்ற ஒளியையும் இருள் விழுங்கிக்கொண்டிருந்தது.

நட்சத்திரங்கள் ஒவ்வொன்ருய் முளைக்க ஆரம்பித்து திடீரென வான முழுவதும் ஜொலித்தன. கீழைத்திசை அடிவானத்தில் பொன்மயமான விளிம்பொன்று தோன்றியது. அது சிறிது நேரத்திற்குள் வளர்ந்து ஜோதிமயமான குளிர்ந்த வெண்ணிலவாகி இருளை விரட்டத் தொடங்கியது.

அரசரின் அழகிய உத்தியானவனம். குளிர்ந்த இளங்காற்று புது மலர்களின் நறுமணத்தை எங்கும் வாரி இறைத்துக்கொண்டிருந்தது. அம்மனோஹரமான வேளையிலே—முழுமதி தோன்றும் மோஹனக் காட்சியி லீடுபட்டு நினைவிழந்திருந்தான் ஸேனாதிபதி குமாரஸிம்மன்; அச்சமயம் 'வீணையிலோர் தந்தி மெல்ல அசைந்தது'போல் "குமார்" என்று ஒரு குரல் ஒலித்தது.

அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்! மறுக்கணம் தனது 'சிந்தனை தெய்வம்' நிற்பதைக் கண்டான்! "குமாரி" என்றது அவன் வாய் அவனையுமறியாமல்.

"வந்துவிட்டீர்களா?" என்ருள்.

"தவறுவேனா?" என்று கூறி அவள் அருகில் சென்றான்.

மலர்கள் குலுங்கிக்கொண்டிருந்த ஒரு மகிழ மரத்தடிக்குச் சென்றனர். அம்மரத்தின் நிழலில் அவள் ஒரு ஜோதிவாய்ந்த தேவகன்னிகைபோல் தோன்றினாள். அதைக் கண்டு அவன் பிரமித்துப்போனான்.

இருவரும் மரத்தடியில் உட்கார்ந்தனர். அவன் அவள் முகத்தை நிமிர்த்தி "குமாரி......அதோ பார்!...நீலவானக் கண்ணாடியில்...நின் முகத்தின் பிரதிபிம்பம் தெரிகிறது" என வானில் பிரகாசிக்கும் முழுமதியைச் சுட்டிக் காட்டினான்.

அவள் ஒரு சிறு நகை பூத்து நாணித் தலை கவிழ்ந்தாள்! "போங்கள்...குமார்...நீங்கள்தான் இந்த ஒரு வருடமாய் என்னை மறந்தே போய்விட்டீர்களே!" என்று கிளிபோல் மொழிந்தாள்.

"போய்விட்டேன் என்பது உண்மைதான். ஆனால் 'மறந்து' என்கிறாயே; அது நிஜமல்ல குமாரி. உன்னை மறக்க என்னால் முடியுமா? அதற்கு எனக்கு வலிமை ஏது அன்பே! போர் முனையிலே நின் 'நினைவு'தான் எனக்கு அஸுர பலத்தைக் கொடுத்தது. நீ என் தைர்யலட்சுமி எனக்கு. ஜயத்தை யளித்த ஜயலட்சுமி நீயே" என் உணர்ச்சியோடு கூறி நிறுத்தினன் குமார்.

"குமார்...உங்கள் பிரிவு நெருப்பினும் சுடுவதாயிருக்கிறது... இனிமேல் இப்படியெல்லாம் போய்விடமாட்டீர்களே..."

அதற்குக் குமரர் குறுநகை புரிந்தான். "குமாரி, உன்னை விட்டு நான் போக உற்சாகப் படுவேனு? உன்னை என் மனப்பூர்வமாக நேசிக்கிறேன். என் மார்பில் காதை வைத்துக்கேள்...என் இருதயம் துடிக்கும் ஒவ்வொரு ஓசையிலும் "குமாரி—குமாரி" என்று ஒலிப்பது உனக்குக் கேட்கும்..." என்று அவளது கரங்களைப் பற்றினுன். அவள் "குமார்" என்று அவன் மீது சாய்ந்தாள். குமாரஸிம்மன் தன் முழு ஆர்வத்தோடும் அவளை இறுகக் கட்டி அணைத்துக்கொண்டான்.

நெடுநேரமாய்' விட்டது. அவர்கள் இன்ப உலகிலிருந்து மீண்டு வர.

"யுத்தமெனும் பாவி நமது யௌவனத்தின் விலை யுயர்ந்த காலத்தை இதுகாறும் வீணுக்கிவிட்டான் கண்ணே!" என்றுன் குமார்.

"இனிமேல் யுத்தமே வராதே!"

"வராது."

"ஆனுல் நமக்கு இன்பமே!"

"இனி துன்பமில்லை."

3

அந்நாளில் இராஜபுதனத்தில் கீர்த்தியும் செல்வாக்கும் மிகுந்து விளங்கியவன் உதயபுரி ராணு பீமஸிம்மன். தாய்நாட்டின் ஸ்வதந்தர்யத்தைக் காப்பதே தனது கடமையெனக்கருதி முகமதியர்களுடன் தளராது சமர் முறுக்கிவந்த தறுக்குளன். அவ் வேந்தர் பெருமானுக்கு அழகின் அவதாரமான ஒரு மகள் இருந்தாள். அவள் பெயர் ராஜகுமாரி. அந்நாளில் அவளுக்கொப்பான வனப்புடைய வனிதையர்கள் இராஜபுதனத்திலேயே கிடையாது. ஆதலின் அந்நாட்டு "அரசர்க் கூட்டமே" அத்திரு மகளின் மோஹத்தில் மூழ்கிக் கிடந்தது.

குமாரஸிம்மன் அரசரின் பெருமதிப்பிற்குரிய ஸேனுதிபதி. அழகும் இளமையும் அறிவும் ஆற்றலும் மிகுந்த ஆண் தகை. ஒருவிதத்தில் அரசனுக்குப் பந்துவுங்கூட.

இளமையில் பெரும்பாலும் அவன் அரண்மனையிலேயே வளர்ந்தான் எனலாம். ஆண் குழந்தையற்ற மஹாராணி அழகொழுகும் இக்குழந்தையை விட்டுப் பிரிய சகியாள். எனவே குமரரும் ராஜகுமாரியும் இளமையில் பிரியாநேசர்களாகிப் பின்பு காதலர்களாயினர். உரிய வயதில் குமார் சைன்யத்தில் சேர்ந்தான். தன் ஒப்பற்ற ஸாகஸச் செயல்களால் யாவரையும் அதிசயிக்கச் செய்தான். பிறகு ஸேனுதிபதியாகி முகமதியர்களை முறியடிக்கவே, அரசரின் அளவில்லாத அன்பிற்குப் பாத்திரமானுன்.

அவர்கள் 'காதலை' அரசர் அறிவார். இந்த விஷயத்தில் தான் தர்மசங்கடப்பட்டார். தம்போன்ற அரசனிடம் சம்பந்தம் வைத்துக்கொள்வதுதான் கௌரவம் என்று எண்ணினார். ஆனால் தன் ஒரே மகள் இணங்குவாளா? அந்தக் கபடமற்ற குமாரஸிம்மனை மறக்கமுடியவில்லையே! "சரி......அவனும் தான் ஒருவிதத்தில் நமக்கு உறவினனுமாகிறான். உதயபுரியையும் ஒரே குமாரியையும் அவனுக்கே கொடுத்துவிட்டால் போகிறது" என்று முடிவு கட்டினார். தமக்கும் 'தள்ளாமை'க்காலம் நெருங்கிக்கொண்டிருப்பதைக் கண்டு அவர்களின் விவாகத்தைப்பற்றிப் பிரஸ்தாபித்தார்.

அவ்வளவுதான் தாமதம்! உடனே இராஜபுதனமெங்கும் பெருங் கொந்தளிப்பு ஏற்பட்டது.

எல்லா அரசகுமாரர்களும் "நான் நீ" என்று போட்டியிட்டனர். வாலிபமிழந்த ஜயபுரி மன்னன்—ஜயஸிம்மனும் அம்மடவாளை வேண்டி நின்றான்.

"பீமஸிம்ம! உனது மகள் எனக்கு உரியவள். உயிருடன் என்னிடம் ஒப்படை. இன்றேல் உதயபுரி மண்ணோடு மண்ணாகும்" என ஜயஸிம்மன் ஓலை போக்கினான். தனக்கு உதவிக்கு வரும்படி முகம்மதியர்களை நாடினான். சமயம் எப்போது வாய்க்குமென நோக்கிக்கொண்டிருந்த அவர்களும் விரைவில் உதவ முன் வந்தனர். இதர குறுநில வேந்தர்களும் உதயபுரியை நிர்மூலமாக்குகிறோம் என ஆர்ப்பரித்துக் கிளம்பினர். அவர்களுக்கும் பெண்கொடுக்கவில்லை என்ற கோபம் போலும்!

உதயபுரியில் பெருங் குழப்பம். நாற்புறமும் பகைவர்கள் சமுத்திரம்போல் சூழ்ந்து நின்றனர். பீமஸிம்மனுக்கு ஒருவராவது உதவ முன் வரவில்லை. மன்னன் மலைத்து நின்றான்.

உடனே மந்திராலோசனை சபை கூட்டப்பட்டது. "முகமதியர்களுடன் சமர் முறுக்கியதில் ஏற்பட்ட காயங்களின் இரத்தம் கூட இன்னும் உலரவில்லையே! இதற்குள் இன்னொரு யுத்தமா?" என வெருண்டார் ஸபையோர். குமார ஸிம்மன் கடுஞ் சீற்றங் கொண்டான்! "இடுங்கள் ஆணை. எதிரிகளை எமனுலகு ஏற்றுகிறேன்" என இடிபோல் முழங்கினான்.

"ஓயாது சமர் செய்து உதய புரி அலுத்துக் கிடக்கிறது. பகைவரோ எண்ணிலர். சமாதானமே சாலச் சிறந்தது" என்றனர் மற்றவர்.

குமாரின் கோபம் கரை கடந்தது. "கோழைகளே" என் கர்ஜித்தான்.

"குமார் உன் 'காதலின் கண்க'ளுக்கு உண்மைநிலை தெரியவில்லை. உன் காதலுக்காக உதயபுரி நாசமாவதோ?" என்றான் பிரதம மந்திரி.

"குமார், நீ கலக்கமடைந்திருக்கிறாய்; போய் சிறிது ஓய்வு எடுத்துக்கொள். போ" என்றார் அரசர்.

குமார் வெளியேறினன்.

உதய்புரிக்காக ஐகுமாரி ரார்ஜயசிம்மனே மணக்கவேண்டும் என்னும் தீர்மானத்திற்கு மஹாராணு இணங்கவேண்டிய தாயிற்று.

4

இரவு எங்கும் ஒரே அந்தகாரம். பீமஸிம்மன் தன் அந்தரங்க அறையில் உட்கார்ந்திருந்தான். துயரம் நிரம்பிய முகத்துடன் ராஜ குமாரி எதிரே நின்றுகொண்டிருந்தாள். அவள் கண்களிலிருந்து நீர் அருவிபோல் வந்துகொண்டிருந்தது.

அரசர் அவளைப் பார்த்துக் கூறுகிறார் :—

"குமாரி, உன் உரிமையை நான் பறிக்க விரும்பவில்லை. இதனால் உன்னை எத்தகைய கொடிய வேதனைக்குள் ஆழ்த்துகிறேன் என்பதை நான் நன்கறிவேன். ஆனால் 'எண்ணற்ற மக்களின் நரகவேதனையைப் போக்க நீ இந்தத் தியாகத்தைச் செய்' என்று கெஞ்சுகிறேன். உன்னைப் பெற்று வளர்த்த உன் பிதா உன்னிடம் பிச்சை கேட்கிறான், அன்பே......

நீ என் குழந்தை; இந்தப் பிரஜைகளும் என் மக்களே அல்லவா? உன்னைவிட இவர்கள்தான் உயர்ந்தவர்கள் என என் கடமை கூறுகிறது. தன் பந்துக்களாலும் அன்னியர்களாலும் தன் குடிகளுக்கு இன்னல் விளையாமல் காப்பவனன்றோ வேந்தன்? தாய் நாட்டின் அநேக ஆயிரம் ஜனங்களின் சுகத்திற்காக நமது ஒரு 'சுயநல'த்தைத் தியாகம செய்யக்கூடாதா?

கிரேதாயுகத்தில் ரேணுகையினால், திரேதாயுகத்தில் சீதா தேவியினால், துவாப்ரயுகத்தில் திரௌபதையினால், இப் பாரத நாட்டில் இரத்த வெள்ளம் ஓடியது. அப்பெருமாட்டிகளினாலும், தடுக்கமுடியாத இரத்த ஆற்றைக் கலியுகத்தில் நீ தடுத்தாய் என்ற அரும்புகழை அடைய ஏன் ஆலோசனை?

காதல் வெறும் கனவு. நிரம்பவும் சிக்கலானது. சுகம் துக்கம் அதில் உண்டு. மகளே! அது உனக்கு வேண்டாம். சாஸ்வத ஆனந்தம் நிலவும் கடமையையே மேன்மையாகக் கருது!

கண்ணே! நன்ருக யோசி. இப்பாரத நாட்டு வீரப் பெண் மணிகள் தங்கள் காதலைக் காட்டிலும் கடமையையே மேன்மையானதாகப் போற்றி வந்திருக்கின்றனர். நீ தூய ராஜபுத்ர ரமணியல்லவா? அவள் இப்படித் தயங்குவாளா..........?"

"அப்பா...அப்பா...போதும்...என்னை மன்னியுங்கள். என் காதலைத் தியாகம் செய்துவிட்டேன். விவாகத்துக்குச் சம்மதம் எனத் தெரிவியுங்கள்.........முந்தியே ஒப்புக்கொள்வேன். ஆனால் 'அவரை'ப்பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். அநேகம் ஆயிரம் மக்களைவிட—உதயபுரிக்குச் செய்யவேண்டிய கடமையை விட—என் தந்தையின் கட்டளையைவிட—எனது குமார் அவ

ளவு உயர்வு அல்ல" என ஒரே மூச்சில் கூறிவிட்டு அவ் வறையிலிருந்து சரேலென்று போய்விட்டாள்.

5

"என்னே இவ்விதியின் சதியாலோசனை? திடீரென்று இவ்வாறு சீரழித்துவிட்டதே! ஏற்றுக்கொண்ட கட்டமையை எவ்வாறு நிறைவேற்றுவேன்? குமாரின் கபடமற்ற அவ்வெழில் முகத்தைக் கண்டாலே என் இருதயம் இளகிவிடுமே!—வைராக்யம் நாசமாகி விடுமே!...கூடாது...இருதயத்தை இரும்பாக்கிக் கொள்ளவேண்டும். தியாகத்திற்குப் பேர்போன இராஜபுத்ர ரமணிகளின் வழியில் வந்த எனக்கு இக்கோழைத்தனம் எப்படி வந்தது? நாடு பெரிதா? நலம் பெரிதா? காதல் உயர்ந்ததா? கடமை உயர்ந்ததா? ஏ! விசித்ர மனமே! நாட்டின் நலனை நாடு! கடமையில் வைராக்கியம் கொள்! இறைவன் ஆக்ஞையே இதுவானால் அதை எதிர்த்துப் பயன் என்ன?" என்று 'துவளும்' தன் நெஞ்சைத் தைரியப்படுத்திக்கொண்டிருந்தாள் ராஜகுமாரி.

"குமாரி" என்று கூவிக்கொண்டே ஓடிவந்தான் குமார். பேயையோ பைசாசத்தையோ கண்டு வெருண்டு வந்தவனைப் போல் அவனது சர்வாங்கங்களும் நடுங்கிக்கொண்டிருந்தன. விழிகள் 'மிரள மிரள' விழித்தன.

"எல்லாம் நிஜந்தானா, குமாரி?" என்றான் பரபரப்பாய். அவள் அதற்குப் பேசாதிருந்தாள்.

"ஏன் மௌனமாய் இருக்கிறாய்? உன் தந்தையின் விருப்பத்திற்கு நீ சம்மதித்து விட்டாயா?"

சிதறிப்போகும் தன் நினைவை ஒன்றாகச் சேர்த்துப் பிடிக்க அவள் முயன்றாள். ஆம் என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தாள்.

"என்ன! ஒப்புக்கொண்டாயா? அப்போது என் நினைவே உனக்கில்லையா? என்ன மோசம்."

"குமார்...என்னை மன்னியுங்கள்...நான் துரோகி...அபாக்கியவதி...என்னை மறந்து விடுங்கள்......"

"குமாரி...நீயா இப்படிப் பேசுகிறாய்? வேண்டாம்...நீ ஆணையிடு...அனலை விழுங்குகிறேன். காற்றிலேறி அவ் விண்ணையும் சாடுவேனே! நின் கடைக்கண் பணி கண்டால்......இந்த ஜயபுரி மன்னன்தானா பிரமாதம்?" என்று அவள் கரங்களைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினான்.

அவள் ஒரு கணம் இன்ப உலகில் இருந்தாள். மறுகணம் திடுக்கிட்டாள். கடமையை மறந்து தன் கள்ள மனம் எங்கோ செல்வதை உணர்ந்தாள்.

"குமார், தயவு செய்து வெளியே போய்விடுங்கள்...தந்தை கண்டால் சங்கடம்..."

"இந்த சங்கடத்தை விடவா?"

தர்க்கத்தை இப்படி வளர்த்திக்கொண்டே போக அவள் விரும்பவில்லை. மனதை வயிரமாக்கிக்கொண்டு அவ்வீரப் பெண் ஓர் நாகாஸ்திரத்தை எடுத்துப் பிரயோகித்தாள்.

"தங்களுடன் இனி பேசவும் நான் விரும்பவில்லை. நல்லதனமாகச் சொல்கிறேன்—செல்லுங்கள் வெளியே."

அப்பேரிடி அவன் தலையில் வீழ்ந்தது. குழம்பிக்கொண்டிருந்த மூளையில் பலமாகத் தாக்கியது. எதிர்பாராத அதிர்ச்சியினால் புத்திமாருட்டம் தெளிவது இயல்பு. அதேபோல் அவன் சித்தப்பிரமை தெளிந்தது. காதற்புயல் ஓய்ந்தது. ஹா...ஹா வென விகாரமாகச் சிரித்தான். அதைக் கண்டு அவள் பயந்து போனாள்.

"காமம் என் கண்களை மறைத்தது. ஆலத்தை அமுதம் என நினைத்தேன். இம்மோசக்காரியை இப்பூவுலகின் மோட்ச நிலையமென எண்ணினேன். ஆனால், ஏ வஞ்சகி! உன்னால் நான் அடைந்தது வெறும் பாவமும் ஏமாற்றமுமே! இறைவன் இன்றென் இருளை நீக்கினான்...ஸாகஸக்காரி, இனி உன் முகத்திலும் விழிப்பதில்லை......"

இடையே மின்னல்போல் ஓர் ஞாபகம் அவன் மூளையில் பாய்ந்தோடியது. நெடுநாட்களுக்கு முன் ஸந்நியாசியாய் மறைந்துபோன அவன் தந்தையின் ஞாபகம் வந்தது. "அப்பா ...அப்பா" எனக் கூவிக்கொண்டே விரைவாக வெளியே ஓடினான். அப்புறம் அவன் யார் கண்ணிலும் தென்படவே யில்லை.

நேரவிருந்த சண்டை நின்றது. உதயபுரி என்றுமில்லா கலகலப்பாய் விளங்கியது. நல்ல சுப முகூர்த்தத்தில் ராஜ குமாரிக்கும் ஜயஸிம்மனுக்கும் விவாகம் நடந்தேறியது.

கல்யாணமான சில தினங்களுக்குள்ளே ஜயசிம்மன் தான் செய்தது பெருந்தவறு என்று உணர்ந்துகொண்டான். அச் சௌந்தர்யவதியை மணந்தால் ஸொர்க்க போக மனுபவிக்கலாம் என்று எண்ணிய எண்ணத்தில் மண் விழுந்தது. தன் புது மனைவியை உற்சாகப்படுத்த எவ்வளவோ முயன்றும் ஒன்றும் பயனில்லாது போயிற்று. எப்போதும் அம் மதி வதனத்தை 'சோகமேகம்' மூடியே இருக்கும். அந்த அழகிய விழிகளில் மருட்சி மறைந்து போய் துயரமே மிதந்துகொண்டிருக்கும். இத்தனை நாளாகியும் தவறிகூட ஒரு புன்னகை அச் செவ் விதழ்களில் தோன்றவேயில்லை. உடலை வசமாக்கலாம். ஆனால் உள்ளத்தை? தூய அன்பைத் தவிர வேறெதற்கும் அம்மாயாசக்தி உண்டா? மனமொத்த மணாளனை மணக்கமுடியாததல்லவா இப் பேதையின் துக்கத்துக்குக் காரணம்! சாகப்போகும் நான் ஏனோ இம்மோகக் கிணற்றில் இறங்கினேன்! எனத் தன்னைத்தானே நொந்துகொண்டான்.

காலமெனும் வைத்தியன் நாளாவட்டத்தில் அவள் மனோவியாதியைத் தீர்த்துவிடுவான் என நம்பினான். ஆனால் அம்

மருத்துவன அவன் எண்ணத்திற்கு மாருக அவ்வியாதியை அதிகமாக்கிக்கொண்டே போனன்.

அவள் உடம்பு துரும்பாய் இளைத்துவிட்டது. அடிக்கடி நோய்கள் வரத் தொடங்கின. கடைசியாக பலமிழந்து படுக்கையில் படுத்துவிட்டாள். அரசன் தன் ஆசை மனைவிக்காக அரும்பாடுபட்டான். ஆயினும் என்ன பயன்? மனோ வியாதிக்கு மருந்து ஏது?

நோய் மிகவும் முற்றிவிட்டது! "குமார்—குமார்" என்று பிதற்றத் தொடங்கினள். "குமார் வந்தாலாவது பிழைக்கக் கூடும்" என அரசன் கருதினன். ஆனல் எங்கு தேடியும் புலன் கிடைக்கவில்லை.

கடைசி நாள். "குமார்...எங்கே இருக்கிருய்? பாவி உன்னை நான் எவ்வளவு கொடூரமாகப் பேசித் துரத்திவிட்டேன்...ஐயோ குமார்! என்னை வஞ்சகி என்ருயே! இந்த இறுதிக் காலத்திலாவது வந்து என் இருதயத்தைப் பாரேன்...அதனுள் இருப்பது உனக்குத் தெரியும்...ஐயோ எல்லாம் பொய்யாய்.. பழங்கதையாய்—கனவாய் போய்விட்டனவே! ...குமார்...குமார்..."அவ்வீர விளக்கு அணைந்து விட்டது. உயிரற்ற குமாரியின் உடல் உதய புரிக்கே வந்து சேர்ந்தது.

7

அழகிய பூங்காவின் மத்தியிலே ஒரு சமாதி. அதில்தான் உதயபுரிக்காக உயிர்கொடுத்த உத்தமியின் உடல் அடக்கம் செய்யப்பட்டிருந்தது.

காலை நேரம். புள்ளினம் ஆர்த்தன. வானம் மாசு மப்பின்றி நிர்மலமாய் இருந்தது. துறவிகள் இருதயம்போல் பரிதியின் செம்பொன் சோதி எங்கும்பரவி இனிமையாக்கியது.

ஒரு சாது; இளம் வயது. உணவருந்தி எத்தனை நாளாயிற்ருே? தள்ளாடிக்கொண்டே அப்பூங்காவினுள் புகுந்தார். அந்தச் சமாதியின் அருகில் அயர்ந்து உட்கார்ந்தார். அதில் எழுதப்பட்டிருந்தவை அவர் மனதைக் கவர்ந்தது.

"ஜயிக்க முடியாதது காதல். செய்யவேண்டியது கடமை. காதலை ஜெயித்தாள். தாய் நாட்டிற்குச் செய்யவேண்டிய கடமையை முடித்தாள். ஆனல் காதல் போயிற் சாதல். வீரமணி—ராஜகுமாரியின் பொன்னுடல் இதனுள் அடக்கம் செய்யப்பட்டிருக்கிறது."

அவரது விழிகள் இருண்டன. தலை சக்கரம்போல் சுற்றியது! இருதயம் 'டப் டப்' பென்று அடித்துக்கொள்வதை நிறுத்திவிட்டது போலிருந்தது.

"குமாரி சென்று விட்டாயா? கடமைக்காக உன்னை அழித்துக்கொண்டாயா! பாரத நாட்டின் வீரமாதேவி! நீ பிறந்ததன் பலனை பெற்றுவிட்டாய்—ஆனல்...நான் ஏமாந்தேன்—" என்று முணுமுணுத்துக்கொண்டே கீழே சாய்ந்தார்.

யார் அந்த ஸாது? ஸேனதிபதி குமாரஸிம்மன் தான்.

# எறும்புகள்

(ஆர். ருக்மணி சாம்பசிவம்)



ஆழ்ந்து நோக்குவோமானால்—அல்லது ஆராய்ச்சி நூல்களைப் புரட்டினோமானால், மனித வாழ்க்கையின் சீர்திருத்தமெல்லாம், மற்றவற்றின் வாழ்க்கைச் சீர்திருத்தத்தின் பிற்பட்டவையே எனத் துணிய எண்ண முண்டாகும்.

ஆறறிவுள்ள தற்கால மனிதர்களுக்கு முன்பே, ஐயறிவுடையனவும், ஐயறிவிற்குக் கீழ்ப்பட்டனவும் தற்போது பெற்றுள்ள—இனிப் பெறப்போகிற பழக்க வழக்கமெல்லாம் பெற்று விட்டன. சுருங்கக் கூறினால் அவற்றின் வாழ்க்கையிலே எவ்வளவு சீர்திருத்தம் ஏற்படவேண்டுமோ அவ்வளவும் அவை அப்பொழுதே பெற்று விட்டன. ஆனால், ஆறறிவுள்ள மனிதர்கள் தாம் தமக்கு எவ்வளவு சீர்திருத்தம் வேண்டுமோ அவ்வளவையும் இன்னும் பெற்றுக்கொண்டு வருகிறார்கள், ஐயறிவுடையன முதலியவற்றினிட மிருந்தும், அன்னிய மனிதர்களிட மிருந்தும். எனவே, மனிதர்களின் வாழ்க்கையிலே ஏற்பட வேண்டிய சீர்திருத்தங்களுக்கும், நல்ல பழக்க வழக்கங்களுக்கும் முடிவான எல்லை இன்னும் நகர்ந்து கொண்டே போகிறதென்றுதான் கூற வேண்டும்.

ஆனால், ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒரு அறிவுடையன பெற்றுள்ள சீர்திருத்தங்களும், பழக்க வழக்கங்களும் போதுமானவை என்றோ, முழுதும் சிறந்தவை என்றோ அர்த்தமில்லை. உற்பத்திக் காலத்திலேயே அவை அவற்றைப் பெற்றிருந்தன என்பதுதான் முக்கியம். மனிதன் இன்னும் பெற்றுக்கொண்டு தானே வருகிறான்?

காலச் சுழற்சியின் அதிர்ச்சியிலே சில, இடம் பெயர்ந்தன: பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்த மக்கள், எழுதேடோ (காகிதம்), எழுத்தேடோ (நூல்கள்) பெற்றிருந்தார்களா? அப்பொழுதெல்லாம் அவர்கள் ஒவ்வொருவரும் கவி தாகூரைப்போல இயற்கைதேவியின் 'மேனி ஏடு'களைப் படித்து, கவி உள்ளம் பெற்றிருந்தார்கள்.

இப்பொழுதுள்ளவர்கள்-பெரும்பாலார், ஏட்டுச் சுரைக்காயர்களாய்ப் போய்விட்டதற்குக் காரணம், படித்தவற்றை இயற்கையோடு பொருத்திப் பார்க்காததோ, இயற்கையை இனிக்க, சுவைக்க, ரசிக்கத் தன்மை யில்லாததோதான். அதனாலேயே தான் உலகத்தில் 'வரட்டு உள்ளங்'கள் அதிகரித்து விட்டன! 'கவி உள்ளம்' வேண்டுமானால், இயற்கை எழிலிலே முதலில் முழுகித்தான் ஆகவேண்டும்.

அட! கேவலம் எறும்புகளைப்பற்றி நானறிந்த இரண்டொன்றைக் கூற அல்லவா தொடங்கினேன்! அநாவசியமாகப் பெரிய விஷயங்களில் தலையிடுகிறேனே! ஒருகால், எறும்புகளுக்கும் இயற்கையோடு சம்பந்த மேதேனும் இருக்குமா? அல்லது எறும்பேதான், இயற்கையா! அப்படியானால், இன்னும் எவ்வளவோ ஜீவராசிகளிருக்கின்றனவே அவை? அவையும், காணப்படுகின்ற எவையும் சேர்ந்துதான் இயற்கையா? எது எப்படிக் கிடந்தால் எனக்கென்ன! எறும்பைப் பற்றித்தான் சொல்லப் போகிறேன். அதுவும் இரண்டொன்று. இதை யாரும் படிக்கக்கூடாது. ஏனென்றால், இயற்கையைக் கூர்ந்து நோக்க ஆரம்பித்து விட்டார்களானால்..............சரி; ஆரம்பிக்கலாம்:

எறும்பா? ஆமாம். சித்தெறும்பு, கட்டெறும்பு, செந்தேளெறும்பு, கூனெறும்பு, வெல்ல எறும்பு, தானிய எறும்பு, மாமிச எறும்பு, சாக்கடை எறும்பு, தழை எறும்பு, குளவி எறும்பு, காட்டெறும்பு, பேய்க்காலெறும்பு முதலியன இருக்கின்றன.

முதலில் இவற்றின் அடையாளங்களையும், வாழு மிடங்களையும் கூறிப் பிறகு குணஞ் செயல்களைத் தனித் தனி விரிப்பின் பெருகு மாதலின், பொதுவர்க்கக் கூறி முடித்துக் கொள்கிறேன்.

1. சித்தெறும்பு:—இதைச் சிற்றெறும்பு என்றுஞ் சொல்லவரும். எல்லா எறும்புகளைக் காட்டிலும் உருவத்தில் சிறிய எறும்பே இது. அதனாலேயே இப் பெயர் பெற்றது போலும்.

இதனுடைய நிறம்; மஞ்சளும், சிகப்புங் கலந்த நிறம். மாவு பதார்த்தங்களை திருடுவதில் வல்லது.

2. கட்டெறும்பு:—இதைக் கட்டை எறும்பு என்றுங் கூறுவார்கள். எனினும், கட்டு எறும்பு என்று கூறுவதுதான் பொருத்தம். ஏனெனில், இது கடித்தால் நமக்கு அதிக நேரம் வலிப்பதோடு, கடிக்கப்பட்ட இடம் கட்டியாகி விடும். அதாவது, தடித்து வீங்கி விடும். இதன் நிறம்: சுத்தக் கறுப்பு. ஒரு நெல்லைவிட் நீளமாக இருக்கும். எனினும், மெல்லிதாக அதாவது, 'லீன்' ஆக இருக்கும். இதனுடைய உணவு, பெரும்பாலும் அசீரப் பொருள்களின் பால், அல்லது சாரமே யாகும். வாழ்விடம்: வேலி, புதர்.

3. செந்தேளெறும்பு: — இது கடித்தால், செந்தேள் கொட்டிவிட்டது போலிருக்கும். நிறத்திலும் செந்தேளின் நிறமே. அதனாலேயே இதற்கு இப் பெயர் வந்திருக்கவேண்டும். இதன் பருமன், சிற்றெறும்பைக் காட்டிலும் இரண்டு பங்கு பெரிது; கட்டெறும்பைக் காட்டிலும் மூன்றில் இரண்டு பங்கு சிறியது. ஈரமான பிரதேசமே இதன் வாழ்விடம்.

4. கூனெறும்பு:—கூன் விழுந்த 'பாட்டி'போல வளைந்து இருக்கும். மெதுவாகத்தான் நடக்கும். யாரையுங் கடிக்காது. தொந்தரை செய்யாது. எனினும், பழஞ்சாதத்தில் நிறைய வந்து

விழுந்து இறந்து கிடக்கும். மக்கிப்போன பொருள்கள் என்றால் இதற்கு உயிர். உருவத்தில் கட்டெறும்பைப் போல வென்றாலும் வளைந்து, நீண்ட கால்களை யுடையது. நிறம், சாதாரண கருப்பு. வாழிடம்: ஏதேனும் ஒருவித நாற்ற மடிக்கக்கூடிய ஈரப் பிரதேசமே.

5. வெல்ல எறும்பு:—வெல்லம் முதலிய இனிப்புள்ள உணவுகளைத் திருடித் திருடி இப்பெயர் பெற்றது போலும். வெல்லத்தை நாம் வயிற்றிற்குள் வைத்துப் பாதுகாத்தாலும், தேடிக் கண்டுபிடித்துச் சிறிது அள்ளித் தின்றுவிட்டுச் சென்று விடும். நிறம், மங்கல் கறுப்பு. கட்டெறும்பை விடச் சிறிதளவு பெரியது. தலை கொஞ்சம் மொத்தமாக இருக்கும். கடிக்கத் தெரியாது. தப்பித் தவறி க்கடித்தாலும் அதிகம் வலிக்காது. வாழ்விடம், இனிப்புக் களஞ்சியங்கள்!

6. தானிய எறும்பு:—முன்னொரு காலத்தில் மனிதர்களுக்கு இது செய்த பேருபகாரத்தை நான், என்னவென்று சொல்ல? முன்னெல்லாம் பஞ்சகாலம் வந்தால் பல ஏழை மக்கள் பயப்படுவது கிடையாது. பேசாமல் கையில் ஒரு கூடையும், மண் வெட்டியோ அல்லது கடப்பாரையோ ஒன்றையும் எடுத்துக்கொண்டு கிளம்புவார்கள். நேரே தானியம் அடித்த களத்திற்கோ அல்லது புல் அதிகமாகவுள்ள பிரதேசத்திற்கோ போவார்கள். தானியத்தை வாரிக்கொண்டு திரும்புவார்கள். எப்படியா? இதோ சொல்லுகிறேன்.

இந்தத் தானிய எறும்புகள், தானியக் களத்தைச் சுற்றி வளை தோண்டி இருக்கும். அறுவடை காலம் வருமானால் அந்தக் காலம் முடிவதற்குள் ஒவ்வொரு வளையிலும் இந்த எறும்புகள் குறைந்த அளவு பட்டணம் படி ஒரு படியோ இரண்டு படியோ சேகரித்து வைத்து விடும். அவ் வளவை ஓர் ஆண்டிற்குள் தின்ன முடிவதில்லை இவைகளால். மீதம் கெடாத வகையில் பத்திரப்படுத்தி வைக்கப்பட்டிருக்கும்; அல்லது இவைகள் தீண்டின தானியங்கள் 'முளைக்க லாகாது' எனப் பிரமன் சாபமோ என்னவோ யார் கண்டார்கள்!

புல் விதைகளையும் இப்படியே உரிய காலத்தில் ஒவ்வொரு வளையிலும் சேகரித்து வைத்து விடும். இவற்றைத்தான் மக்கள் பஞ்ச காலத்தில் கொள்ளை யடித்துக்கொண்டு வந்து சாப்பிட்டார்கள். இப்பொழுதும் சில வளைகளைத் தோண்டிப் பார்த்தால் உண்மை உணரக் கிடக்கும். அப்படிப்பட்ட பஞ்சம் இன்னும் வரவில்லை யல்லவா! வரும்போது தானிய எறும்புகளின் வாயில் மண்ணை யள்ளிப் போட்டு விட்டு நாம் வாரிக்கொண்டு வந்தாலும் பரவாயில்லை. அதனால், எறும்புவளைத் தோண்டுங் காரியத்தை நாம், சோதனை அல்லது பரிட்சை அளவிற்கு வைத்துக் கொள்வோமாக.

உருவத்தில் இது, அசல் செந்தேனெறும்புதான். என்றாலும், நிறம் மங்கல் கருப்பு; கடித்தால் அதிகம் குடையாது. வஞ்

சந்திர்த்துக்கொள்ளத் தூரத்தவுஞ் செய்யாது. இதைச் 'சமய சஞ்சீவி எறும்பு' என்றாலும் பொருந்தும்.

7. மாமிச எறும்பு:—மாமிசம் என்றால் இதற்குத் தேவாமிர்தம். புழு, பூச்சிகளின் பிணங்களைத் தேடித் திரிவதுதான் இதற்கு வேலை. தேங்காய் மூளிகளில் உள்ள ஈரத்தை யெல்லாம் வந்து குடித்து விட்டுச் சென்று விடும். வெல்லம் கிடைத்தாலும் ஒருகை பார்க்கும். உருவத்தில் சிற்றெறும்பு அளவு இருக்கும். நிறம், கருப்பு ஓட்டத்தில் அசல் ஒன்றும் நம்பர் திருடன் தான். இது, நீர் இல்லாத எந்தப் பிரதேசத்திலும் வாழ்க்கை புரியும்.

8. சாக்கடை எறும்பு:—இது, வாழ்க்கையைச் சாக்கடையிலேயே ஆரம்பிக்கிறது. சாக்கடை நீர்தான், இதற்குக் காவேரி. இந்தச் சாக்கடைக் காவேரியின் கரையிலே, மூன்று மாதத்திற்குள் ஒருமுறை வளையை விட்டு எல்லாம் வெளியே வந்து கூடி, இந்திரவிழா நடத்தி விட்டுத்தான் உள்ளே செல்லும். சில சமயங்கள் அந்தக் காவேரிக்குச் சொந்தக்காரர்கள், அவற்றை இந்திர உலகத்திற்கே அனுப்பி வைப்பதும் உண்டு.

சாக்கடையிலே சிந்திக் கிடக்கும் யாவும் இவற்றின் உணவே. இவை, எறும்புகளெல்லாவற்றினும் பெரியவை. நிறம் கறுப்பு. கடிக்க வேண்டுமானால் அழுத்தம் திருத்தமாகக் கடிக்கும். வலியும் அப்படித்தான். இதிலுள்ள ராஜா எறும்பு சுண்டுவிரல் மொத்தங்கூட இருப்பதுண்டு.

9. தழை எறும்பு:—இதைக் கிராம மக்கள் வேறு விதமாக அழைக்கிறார்கள். இது, மரங்களின் நுனியிலுள்ள தழைகளை அப்படியே வளைத்து ஒருவித நூலை உபயோகித்து அதைக் கூடாகச் செய்து, அதில் வாழ்க்கை புரிகிறது. பழங்களை உணவாக்கிக் கொள்கிறது. இவ்வின எறும்புகள் வாழும் மரங்களில் எவ்வித காரணத்தை முன்னிட்டும் மக்கள் ஏறக்கூடாது—ஏறவும் முடியாது. துரத்திக்கொண்டு மந்தை மந்தையாக வந்து கடிக்கும். கடித்தால், உயிரே போய்விடும்போலாகிவிடும்.

நிறம், மங்கலான மஞ்சள். கட்டெறும்பை விடச் சிறிது நீளம். இலுப்பை, மாமரங்களில் அதிகமாக வாழும்: அவற்றின் 'பாலு'ம் அவற்றிற்கு உணவாகும்.

10. குளவி எறும்பு:—இதன் வாழ்க்கையிலே இது, பாதி நாள் எறும்பாகவும், வாழ்க்கையின் பிற்பகுதியிலே இறக்கைகள் முளைத்துப் பறந்து, குளவியாகவும் இருக்கிறது. எல்லா எறும்புகளின் பொது இலக்கணந்தான் இதன் இலக்கணமும். ஏனென்றால், ஒவ்வொரு இனத்திலும் இறக்கை முளைக்கும் அதிர்ஷ்டம் வாய்ந்த எறும்புகள் சில வுண்டு.

11. காட்டெறும்பு:—காட்டிலே பெரும் புதர்களிலே புற்று போன்ற பெரிய வளைகளை அமைத்துக்கொண்டு வாழும். உரு

வத்திலேயும் சாக்கடை எறும்பை ஒத்திருக்கும். நிறங் குணங் களிலும் அப்படித்தான். நீரற்ற மேட்டுப் பாகங்களில் வசிக்கும் வித்தியாசம் ஒன்றுதான். நன்ருய்க் கடிக்கும். எக்கச் சக்க மாய் வலிக்கும். இதன் சிநேகிதன் பாம்புதான்.

12. பேய்க்கால் எறும்பு:—நீண்ட கால்களை யுடையதால் இப் பெயர் பெற்றது. கடிக்கவே தெரியாது. 'ஊமை எறும்பு' என்ருலும் பொருந்தும். பயந்து பயந்துகொண்டு ஓடும்.

இன்னும் பல வகைகள் இருக்கலாம். இருந்தாலும், அவை களையும் இவ் வினங்களில் அடக்கியே பிரிவு கூறலாம். ஆகலின், பொதுவாக இவற்றின் நடத்தையைக் கவனிப்பதும் அவசியமே.

எறும்புகளின் இந்தப் பலவித இனங்களுக்குள்ளே சிறந்த நாகரிக முடையதும், வாழ வழி தெரிந்ததும் ஆன ஓர் இனம், கட்டெறும்பின் இனமே: ஆகவே, அவற்றைப்பற்றி ஆராய்வது மற்றையவற்றையும் ஆராய்வது போலவே யாகும். ஆதலினலே, கட்டெறும்பின் இனம் என்னென்ன செய்கிறதென்று பார்ப்போம்:

கட்டெறும்புகள், சிறு புதர், சிறு வேலி, செடிகளடர்ந்த தோட்டம், வீடுகளின் சுற்றுப்புறம் முதலிய விடங்களில் வாழும்.

இவைகளுக்கு மழைகால வளை, வெயிற்கால வளை என இரு வகை யுண்டு. மழை பெய்யும்போது நனையாத இடத்திலே இருக் கும் வளை, மழைகால வளை. வெயிற் காலத்திலே, ஓரளவு ஈரம் இருக்கு மிடத்தில் உள்ள வளை, வெயிற்கால வளை.

சீதோஷ்ண நிலையோ, பருவங்களின் நிலையோ மாறும்போது ஒரு வளையிலிருந்து மற்ருெரு வளைக்குக் குடிபோகும். குடி போகப் படும் வளை இவ்வளவு தூரத்தில் இருக்கும் என்பதும், இன்னது என்பதும் நியதியில்லை; அவை முன் கூட்டியே குறித்து வைப்ப தும் கிடையாது.

ஆகவே, சில சமயங்களில் சுமார் இரண்டு பர்லாங்கிற்கு அப் பாலுங் கூடக் குடிபோகும்படி நேரிடலாம். இதெல்லாம் அவ் வினத்தின் தலைவர்களைப் பொறுத்திருக்கின்றன.

குறைந்த பட்சம் ஓர் குடும்பம் பதினைந்து நபர்களையாவது உடையதாக இருக்கும். ஏறினது பத்தாயிரம் நபர்களையாவது உடையதாக இருக்கும்.

தலைமை எறும்புகள் தாம் ஒவ்வொரு குடும்பத்தையும், பொறுப்பாகப் பாதுகாக்கும். குடும்பத்தைப் பொறுத்து இத் தனைத் தலைவர்கள் வேண்டும் என்று அவையே முடிவு கட்டும் போலும்.

ஒரு தலைவன் முதற்கொண்டு, ஏழு தலைவர்கள் வரை உள்ள ஒரு 'பேரவை' இருக்கும் போலும்! ஒரு தலைவன் இருப்பது, சிறு

குடும்பத்திற்கு. குடும்பம் பெருகப் பெருகத் தலைமைத் தானங்களும் அதிகரிக்கும் போலும்!

ஆம்! 'குடியரசு' ஆட்சியே!

இப் 'பேரவை'யில் உள்ள அங்கத்தினர்கள் அதாவது பொறுப்பாட்சித் தலைவர்கள், காலநிலை, இடநிலை மாறும்போது, வேறு வழி அவசியமாயின் அதற்கான சுற்றறிக்கையைத் தாமே நேரிற் சென்று வாய் மூலமே தெரிவிப்பார்கள். அது மட்டுமல்ல; குடியேறுவதற்கு என்னென்ன செய்து, எந்தெந்த விதத்தில் தயாராய் இருக்கவேண்டுமோ அவற்றையும் தெளிவாக நேரிலேயே எடுத்துக் கூறுவார்கள். பிறகு, நிலைமை தயாரானதும் தம் சமூகம் மூட்டை மூடிச்சுகளைத் தூக்கிக்கொண்டு தம்பின்னே வரிசையாக வரத் தாம் முன் செல்வர். மூட்டை முடிச்சுகள் வேறொன்று மில்லை; முட்டையும் பொறித்த குஞ்சுமே யாம். தேவையானல் கையிலுள்ள முக்கிய வுணவுகளும் அவற்றோடு சேரும்.

இப்படித் தலைமை எறும்புகள் முன்னே சென்று கொண்டிருக்கும்போது பின்னே ஏதேனும் கலகம் விளைந்தால், செய்தி, தலைவர்களுக்கு விரைவில் எட்டும். அதனல் சில தலைமை எறும்புகள் வரிசையாகச் செல்லும் கூட்டத்தின் நடுநடுவே வருவதும் உண்டு.

கலகம், அன்னியர்களால் ஏற்பட்டதாயின் அதைப் பொது எறும்புகளே நிவர்த்தி செய்து கொள்ளும். உதாரணமாக, சில மனிதர்கள் அவற்றின் பாதையைக் கலைக்கும்படி நேர்ந்தால் அவை, 'நொய்' என்ற சப்தமிட்டுக் கொண்டு அங்கேயே அவை கூட்டமாகத் திரண்டு விடும். பிறகு, பாதையின் தொடர்ச்சியைச் சில எறும்புகள் கண்டு பிடித்துக்கொண்டு வந்து கூற யாவும் செல்லும். அப்படி எத்தனைமுறை இடையூறு நேரினும் அவை பொறுமை குன்றுமல் காரியத்தை நிறைவேற்றும்.

இன்னும் சில சமயங்களில் வரிசையின் பாதியிலே துண்டாடிப் போய் விடுவதும் உண்டு; அந்தச் சமயங்களிலும் அவை பொறுமையோடு முன் சென்றுள்ள எறும்புகளின் அடிச்சுவடுகளின் குறியைக்கொண்டே விடாமல் தொடர்ந்து விடும்.

எறும்புகள், தம் இனத்தின் அடிச்சுவடு இன்னதென்று பாறைகளின் மேலும், புற்களின் மேலும், இலைகளின் மேலுங் கூட கண்டுபிடித்துத் தொடர்ந்து சென்று விடுகின்றன வென்றால், அவற்றின் திறமையை ஓர் வரம்புக்குள் அடக்கி எப்படிக் கூறுவது?

முன்னே செல்லும் தலைமை எறும்புகளுக்கே மனிதர்களாலோ, மாடு, ஆடு முதலியவற்றினலோ ஓர் இடையூறு ஏற்

படுமானல், அது காரணமாகத் தம் பிரயாணத்தை நிறுத்தி வைக்க மாட்டா. தப்பித் தவறி மீண்ட தலைமை எறும்புகளை மீண்டும் அதே கணத்தில் தயாராகி கூட்டத்தை அழைத்துக் கொண்டு செல்லும்.

சில சமயங்களில் சட்டென்று வளை அகப்பட வில்லையெனில், தற்காலிகமாக ஏதேனும் ஓர் பெரிய வஸ்துவின் கீழ்ச் சென்று தங்கும்படி இடந் தயார் செய்து கொடுப்பதோடு, சுற்றறிக்கையை யும் விடுத்து விடும், தலைமை எறும்புகள். பின் சாவதானமாக ஒருநாள் கழித்துக்கூட வளையைத் தேடிக்கொண்டு யாவும் கிளம் புவதுண்டு.

இப்படிப் போகும்போது தத்தம் முட்டையையும், குஞ்சுகளை யும் ஈன்ற எறும்புகளே எடுத்துச் செல்லும் என்பது கிடையாது. சுமை எடுத்துச் செல்வதற்கு ஒவ்வொரு எறும்பும் முந்தும். சுமை கிடைக்காத எறும்புதான் கையை வீசிக்கொண்டு நடக்கும்.

தூக்கிக்கொண்டு செல்லும்போதே கை வீசிக்கொண்டு வரும் எறும்புகள், தாம் தூக்கிக்கொண்டு வருவதற்காக மற் றவைகளைக் கேட்கும். அவை இஷ்டமிருந்து கொடுத்தால்தான் இவை எடுத்துக் கொண்டு செல்லும்; இல்லாவிட்டால் மீண்டும் அப்படியே தான்.

சில எறும்புகள், வழியிலே எந்தக் காரணத்தினாலோ அலுத் துச் சுருண்டு வீழ்ந்து விடுவதுண்டு. விழுந்த எறும்புகளை மற்ற எறும்புகள் தூக்கிச் செல்லும்.

பிரயாணத்தின்போது இரண்டு மூன்று எறும்புகளாகச் சேர்ந்து தூக்க வேண்டிய வஸ்துக்கள் ஏதேனும் வழியில் கிடந் தால் அவற்றைக் கட்டாயம் தொடமாட்டா. வழிப் பயணம் கெட்டு விடுமே! சிறிய வஸ்துக்கள் கிடைத்தால் சும்மா செல்லும் எறும்புகள் கையில் பிடித்துக்கொண்டு செல்லும்.

இந்த எறும்புகளுக்குள்ளே கட்டாயம் சோம்பேறிகளையும், பிச்சை எடுப்பவைகளையும் பார்க்கவே முடியாது. பிறந்த எறும் பிற்குக் கைகால் முளைத்தோ இல்லையோ முன்னேயே உழைக்கக் கிளம்பி விடும், அது. இப்படி மனிதர்களில் ஆயிரத்திற்கு எத் தனைபேர்—இருக்கிறார்களோ, யார் கண்டார்கள்?

முடிவாக எறும்புகள், ஒற்றுமையான—உழைப்புள்ள ஒரு சமூகம். அவற்றைப் பார்த்து நாம் அறிய வேண்டுவன இன்னும் எத்தனையோ உள்ளன. அறிந்து கொள்வோமாக.

---

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")



(சென்ற இதழின் தொடர்ச்சி)

இந்த உயர்ந்த கல்வித்திட்டத்திற்குத் தலைமையிடமா யிருப்பது சேவா கிராமந்தான். இதற்கென்று சேவா கிராமத்து ஆசிரமத்திற்குப் பக்கத்திலேயே விடுதிகள் அமைத்து செயல் நிகழ்ந்து வருகின்றது. இதன் செயலாளர் திரு. அரிய நாயகம் அவர்களாவர். காங்கிரஸ் கட்சியார் இன்னும் சிறிது காலம் அரசாங்கத்தை வகித்திருப்பின், இத்திட்டத்தை செம்மையாய் அமுல் நடத்திவைத்திருப்பர். இத்திட்டத்தை எல்லாப் பள்ளிகளிலும் உடனே நடைமுறையில் கொண்டுவந்துவிட வேண்டும் என்னும் கருத்தோடு வார்தாவில், ஆசிரியர்கட்கும் ஓர் பயிற்சிக் கூட்டம் அமைக்கப்பட்டு நடந்துவருகிறது.

## திரு. அரியநாயகம் தம்பதிகள்

இந்த அரிய கல்வித் திட்டத்திற்குத் தோற்றுவாயாக விருந்தவர்களில் திரு. அரியநாயகம் தம்பதிகளுமாவர். இவர்கள் யாரென்று ஆராய்வது தமிழர்களாகிய நமக்கு உவகை யளிப்பதாகும். மேற்கூறியவாறு ஓர் அழகிய கல்வித் திட்டத்தைத் தோற்றுவித்தவர்களில் ஒருவரும் தொடக்கத்திலிருந்தே அதைத் திறம்பட அமுல் நடத்துபவரும் ஒரு தமிழரென்றால் உள்ளபடியே தமிழராகிய நாம் பெருமிதமடையத்தான் வேண்டும்.

திரு. அரிய நாயகம், ஓர் ஈழத்துத் தமிழர். யாழ்ப்பாணத்து உயர்குடி யொன்றில் பிறந்து பல்கலைக் கழகப் பட்டம் பெற்று, மேல்நாடு சென்றுப் பயிற்சி பெற்றவர். அங்கும் இருகலைகளில் எம். ஏ. பட்டம் பெற்றார். அவர் அங்கு கல்வியை முடித்துக் கொண்டு தாயகம் திரும்பியபோது மாதம் 1-க்கு ரூபாய் 700-ல் ஓர் வேலை கொடுக்க இலங்கை அரசாங்கம் இசைந்தது; ஆனால், அதை அரிய நாயகம் ஏற்க மறுத்து விட்டார். அவர் நாட்டின் தொண்டில் புகுந்து அரிய புகழ் அடைய வந்திருப்பவராதலால், அப்பதவியை அவர் ஒரு பொருட்டாக மதிக்கவில்லை. தமது உள்ளத்திலிருந்த விடாயைத் தவிர்க்க மகத்தான வொன்றைத் தேடிக்கொண்டிருந்தார். முடிவில் அவர் கல்கத்தா சென்று, கவிவேந்தர் தோற்றிய சாந்தி நிகேதனத்தை யடைந்தார். அங்கு அவர் கற்க விழைந்த வெல்லாவற்றையும் கற்றதோடு, பாரதத்தின் பெருமையை வானளாவ உயர்த்திய கவிஞர் கோன், ரவீந்திரருக்கு 10 ஆண்டுகள் அமைச்சராயும் இருந்து செயலாற்றினார். இங்குதான் அவர், தமது வாழ்க்கைத் துணைவியாய்

வாய்த்த திரு. ஆஷா தேவியை முதன் முதலாய்ச் சந்திக்க நேர்ந்தது.

திரு. ஆஷா தேவி ஒரு வங்க நாட்டு மகள் ஆவர். அவர் உயர்தர ஆங்கிலக் கல்வி கற்றதோடு அமையாது வடமொழியி லும் எம். ஏ. பட்டம் பெற்றவர். அவர் கலைக் கடலை யெல்லாம் பருகிவிடப் பேராசை கொண்டு சாந்தி நிகேதனம் புகுந்தார். திரு. அரிய நாயகரும், திரு. ஆஷா தேவியும் வெவ்வேறு மொழி பேசுபவரா யிருந்தும், இருவரும் ஒத்த கல்வியும், அறிவும் உடை யவர்களா யிருந்தபடியால், இருவரிடையேயும் நட்பு அரும்ப லாயிற்று. இந்நட்பு நாளடைவில் காதலாய்க் கனிந்து, முடிவில் அந்த ஒப்புயர்வில்லாத உலகப் பல்கலைக் கழகத் தலைவர் வாழ்த் தையும் தேடிக்கொண்டு, அந்த இரு கலைவாணர்களையும் வாழ்க் கைத் துணைவிகளாக்கிவிட்டது. பிறகுதான் திரு. ஆஷாதேவி அலகாபாத் வடமொழிக் கல்லூரியில் தலைமைப்பதவி (பிரின்ஸி பால்) ஏற்றுப் பணியாற்றினார். அங்கு அவர் பெற்ற அநு பவமே வார்தா கல்வித் திட்டத்திற்குத் தோற்றுவாயாக விருந்தது என்று சொல்லலாம்.

யான் வார்தா சென்றதும் திரு. அரிய நாயகம் அவர்களைப் பற்றி யறிந்தேன். அவர் ஒரு தமிழ் மகன் என்ற உரிமையில் காண விழைந்தது என்னுள்ளம். காண்போம் என்றவாறே நாட்கள் பல சென்றுகொண்டிருந்தன. இச்சந்தர்ப்பத்தில் திரு. அரிய நாயகம் தம்பதிகட்கு அருமையாயிருந்த 4-வயது ஆண் குழந்தை யொன்று திடீரென இறந்துவிட்டது. இச்செய்தி, இரு தினங்களுக்குப் பின்பே எனக்குத் தெரிந்தது. ஆகவே நான், மேலும் நாள் கடத்த விரும்பாதவனாகி, சேவாகிராமம் சென்று திரு. அரிய நாயகம் தம்பதிகளைத் துக்கம் விசாரிக்க எண்ணிப் புறப்பட்டேன். மற்றுஞ் சிலரும் என்னைத் தொடர்ந் தனர். திருநெல்வேலி திரு. A. கிருஷ்ணனும் வந்தவர்களில் ஒருவர்.

மாலை 3-மணி யிருக்கும். சேவா கிராமத்தி லிருக்கும் அந்த ஈழத்துத் தமிழர் இல்லத்தில் எல்லோரும் புகுந்தோம். அங்கொரு புறத்தில் காரியாலயக் கடிதப் போருக்கிடையில் ஒருவர் அமர்ந்து, அருகில் டைப் அடித்துக்கொண்டிருந்த மற்றொருவருக்கு விஷயம் சொல்லிக்கொண்டிருந்தார். நல்ல மாநிறம். கம்பீரமான தோற்றம்; களை தவழும் முகம். ஆனால், அது சற்று வாட்டமா யிருந்தது. அவர் தமது வேலையில் அழுந்திக் கிடந்தார். அவர் ஒரு பாயில் அமர்ந்து திண்டின்மீது சாய்ந்துக் கொண்டிருந்தார். வார்தா வட்டாரங்களில் மேஜை நாற்காலிகளுக்கு வேலையே யில்லை. எல்லோரும் தரையில் இருந்து காரியாலய அலுவல்க ளைக் கவனிக்கவேண்டும். அவருக்குப் பக்கத்தில் ஓர் அம்மையார், சுமார் 35-வயது மதிக்கக்கூடியவர். நல்ல மாநிறம். அவரது அழகிய கருங்கூந்தல் பின்னி ஜடை செய்யப்படாமல், நேராகப்

யாகத் தொங்கிக்கொண்டிருந்தது. தமது கூந்தலைப் பின்னுமல் அப்படியே தொங்கவிடப்படுவது வங்கத்து உயர் குடி மகளிர்க்கு வழக்கம்போலும். (யான், கல்லூரியில் படிக்கும் வங்க மாணவி களின் புகைப் படங்கள் சிலவற்றைப் பார்த்திருக்கிறேன். அவற் றில் கூட, மங்கையர் கூந்தலை முடியாமலேயே விட்டிருக்கின்றதைப் பார்த்தேன்.) அவரும் ஏதோ அலுவல்களில் ஈடுபட்டிருந்தார். ஆனால், அவர் சோகத்தில் அழுந்திக் கிடப்பதை அவர் முகம் ஒளியாது காட்டிற்று.

உள்ளே நுழைந்த நாங்களனைவரும் வணக்கம் கூறினோம். யான் மேலே குறிப்பிட்ட இருவரும் எங்களை நிமிர்ந்து நோக்கி "வாருங்கள், வாருங்கள்" எனக் கூறி, அருகில் விரிக்கப்பட்டிருந்த பாய்களில் அமரும்படி வேண்டினார். உடனே திருநெல்வேலி A. கிருஷ்ணன் அவர்கள், என்னை திரு. அரிய நாயகம் தம்பதி கட்கு அறிமுகம் செய்தார். பிறகு இறந்த குழந்தையின் பிரிவைப் பற்றிப் பேச்சுகள் நடந்தன. திரு. அரிய நாயகம் அவர்கள் ஓர் ஈழத்துத் தமிழர் என்றேன். ஆகவே, அவர் என்ன மொழி யில் பேசியிருப்பார் என்று சொல்லத் தேவையில்லை. "வீணை மீட்டிப் பாடுவது போன்ற தமிழில்" தான் திரு. அரிய நாயகம் பேசினார். ஆனால், திரு. ஆஷாதேவி ஓர் தமிழருக்கு வாழ்க் கைப்பட்டிருந்தும் அவரால் தமிழில் பேசக்கூடவில்லை; பேசு வதைமட்டும் புரிந்துகொள்ளுகிறார். திரு. அரிய நாயகம் வங்க மொழியிலும் போதிய தேர்ச்சியடைந்திருக்கிறார் என்று சொல் லவா வேண்டும்? சாந்தி நிகேதனத்தில் பத்து ஆண்டுகள் இருந்து கலைபயின்ற அவர், வங்க மொழி பயிலாதிருந்தால் கவியரசர் படைத்த காவியச் சோலையில் எங்ஙனம் உலாவி யிருப் பார்? எனவே, தம்பதிகளிருவரும் வங்க மொழியிலும், ஆங்கில மொழியிலும் தான் பேசிக்கொள்வார்கள்போலும்.

திரு. அரிய நாயகம், தமது அருஞ் செல்வத்தின் ஆடல் பாட்லையும், அவன் சில தமிழ்ச் சொற்களை மட்டுமே அறிந்திருந்த போதிலும், "ஜெயமுண்டு பயமில்லை மனமே" என்னும் வீரக் கவிஞர், பாரதிப் பாட்டைப் பிழையறச் சொல்வான் என்றும் சொல்லும்போது என் கண்கள் ஒரே சமயத்தில் திரு. அரிய நாயகம் தம்பதிகள் முகங்களை நோக்கின. ஆ! என்ன காட்சி. திரு. ஆஷா தேவியார் முகம் காண்போர் நெஞ்சத்தைக் கலக்கி விடக் கூடியபடி, சோகம் கரைபுரண் டோடிற்று. திரு. அரிய நாயகம் கண்கள் கலங்கின. இக்காட்சியைக் கண்ட என் மனம், "கடந்த ஞானியும் கடப்பரோ மக்கள்மேற் காதல்" என்னும் உண்மையை ஐயமற ஒப்புக்கொண்டது.

பிறகு, நாங்கள் வார்தாவிற்குத் திரும்பியபோது வழியி லேயே திரு. அரிய நாயகம் அவர்கள் குழந்தையின் பிரிவு பற்றி, அவருக்கு ஏதாவது ஒன்று எழுதி யளிப்பதென்று தீர்மானித் தோம். அவ்வாறே நான் ஓர் 'இரங்கற்பா' எழுதினேன்.

ஆனால், அச்சிடுவதற்கு அங்கே தமிழ் அச்சுக்கூடமில்லை. ஆகவே, அப்பாலைக் கையினால் செய்த காகிதத்தாளில், அச்சு எழுத்துப்போல் அழகாக எழுதி, சட்டமிட்டு, அதை சேவா கிராமத்தில், திரு ஆரிய நாயகம் அவர்களிடம் அளித்தோம். அது வருமாறு :—

### இரங்கற்பா

செல்வக் கிளியே! சிறப்புடைய பெற்றோர்க்கு
மெல்ல கிடைத்த மேருநிகர் பொற்குன்றே!
செங்கமல நிறக்கையான் தேவிசரஸ்வதி யன்ன
வங்கமது பெருமையுற வந்துதித்தார் உனையீந்தார்;
சீரிலகு தமிழரெலாம் செய்ததவப் பயன்திரண்டு
ஆரிய நாயகனாகி அவதரித்தார் உன்தந்தை.
தமிழ்மறையின் சிறப்பாய தன்மையாம் காதல்மணம்
அமிழ்தனைய உயர்தரத்தில் அவர்கண்டார் தம்வாழ்வில்
அவர்செய்த அறப்பயனே அருமைதிருப் புதல்வ,நீ!
எவர்மனமும் இன்பமுற எய்தினாய் இவ்வுலகில்
திருஞான சம்பந்தச் செல்வனே! நீயென்று
இறும்பூது எய்தினோம் எல்லோரும் ஒருமிக்க.
சதங்கை யொலிக்குமுன் தளர்நடையில் அந்தநாள்
மதயானை தன்னுடைய மாண்புநடை கண்டோம்;
குழலொலியும் கைப்பக் கொஞ்சக் களித்தோமே!
மழலைமொழி நீபகர மகிழ்ந்தகா ளொத்தனையோ!
'ஜெயமுண்டு பயமில்லை' என்றநம் பாரதியின்
புயந்துள்ளும் வீரமொழி புரவலன்போற் சொல்லுவையே!
அவ்வார்த்தை கேட்டு அகமகிழ்ந்த வெம்முள்ளம்
ஒவ்வுமோ உன்றன் பிரிவுக் கொருகாலும்
கன்றைப் பிரிந்து கதறும் தனிப்பசுபோல்
உன்னைப் பிரிந்திங் குருகிவழி நின்றோமே!
'எங்கு சென்றுவிட்டாய்?' என்றேங்கும் எமக்குநீ
'இங்குள்ளேன்' என்று இயம்பாயோ ஓர்வார்த்தை.
மக்கள்மேற் காதல் மாதவரும் விட்டிலரால்
பக்குவரோ எம்போல்வார் பாரிலுனை மறக்க.
சாகாக் கலைபயின்ற பாரதமும் எங்களொடு
பாகாய் உருகிப் பதறுதே உன்பிரிவால்.
விண்ணுளிரும் மீன்களிடை வேந்தனாய் விட்டாயோ!
கண்ணிருந்தும் யாம்காணக் கதைதான் நீசொல்லாயே!
நல்வாழ்வு வேண்டி நடந்தாயோ ஆவலொடு
எல்லாமும் நல்கும் இறைவர் திருவடிக்கே!

(அடுத்த இதழில் முடிவுறும்.)

# உலகம் சுழல்கிறது!

(எம். சாம்பசிவம்)

முத்துப் பண்டாரம், ஒரு சாது; மாரியம்மன் கோயில் பூசாரி; கடவுளிடத்தில் அவன் தான் இந்த வுலகத்திலேயே நம்பிக்கை வைத்திருப்பவன்.

வழக்கம்போல மாரியம்மன் கோயில் வழியாய் உலாவப் போகும் நான், அன்று அவனைக் கோயிலில் கண்டேனில்லை. எதிரே வந்த கோவிந்த கோனுனைக் கேட்டதில் அந்தத் துக்ககரமான செய்தி வெளியாயிற்று.

உடனே முத்து பண்டாரத்தின் வீட்டை நோக்கி நடையைக் கட்டினேன். முத்துப் பண்டாரம் படுக்கையில் கிடந்தான். என்னை நோக்கியதும் வழக்கம்போல், 'வாங்க ஐயா; உக்காருங்க' என்றான்.

இப்பொழுது முத்து பண்டாரம் அதிகம் இளைத்துக் காணப் பட்டான். ஆகா! ஒரு வாரத்திற்கு முன் முத்து பண்டாரம் எவ்வளவு அழகாகவும் ஆரோக்கியமாகவும் காணப்பட்டான்!

"என்ன முத்துப் பண்டாரம். நடந்ததைச் சற்று விரிவாய்ச் சொல்லேன். கேள்விப்பட்டேன், என்றாலும், நீயே சொல்லுவது தான் உண்மையாயிருக்குமென்றுதான் ஓடோடியும் வந்தேன்."

"உடம்பு இருக்கிற நிலையிலே அதிகமா சொல்ல முடியாது; முக்கியமானதைச் சொல்றேன்."

அவன் வீட்டிற்குள் நுழையும்போதே—என் மனம் ஏதோ சொல்லித்து; அப்பொழுது அது, என்னமோ வென்று நினைச்சேன். இப்பொழுதுதானே தெரியறது;

கண்ணுக்கு ரொம்ப அழகாயிருந்தான்; திருடன்னு எந்த மடையனும் சொல்லமாட்டான். நல்ல—கட்டான தேகம்; படிந்த முகம்; அழகான மீசையுங் கீசையும்—நல்லா அருமையாக்கூடப் பேசினான்!

காலத்துக்கு ஏத்தமாதிரி கிராப்புத் தலை; சொக்கா கிக்கா எல்லாந்தான்; அசல் ராஜா இன்னே சொல்லிடலாம்.

வந்தான்; வாங்கன்னேன்; உக்காந்தான்; முகத்திலே, 'லவ' லேசம் வித்தியாசம்!

'ரொம்ப அவசரமான சங்கதி' என்றான். 'இரகசியமானதுங் கூட' என்றான். 'என்ன?' என்றேன்; சொல்ல ஆரம்பித்தான்.

"உங்க மவன்தானே, கடலூர் ஸ்டேஷனிலே வேலை பார்க்கும் ஆறுமுகம்?" என்றான்; 'ஆமாம்' என்றேன்; 'சரி' என்று ஆரம்பித்தான்:

"நேற்று ராத்திரி அவனுக்கு ஒரு ஆபத்து; நானில்லாவிட்டால் அவனுக்கு தண்டனையே கூட ஏற்பட்டிருக்கலாம். இருந்தாலும் நான், ஜாமீன் கொடுத்து மீட்டிருக்கிறேன்.

"ஒரு மாதத்திற்கு முன்னே அங்கு ரயில் கவிழ்ந்துவிட்டதல்லவா? அது சம்பந்தமாக இவனைச் சந்தேகப்பட்டு, பிடித்துவிட்டார்கள்; நான்தான், அவனைக் காப்பாற்றி வைத்திருக்கிறேன். உடனே நாம் புறப்படவேண்டும்...

"ஆறுமுகந்தான் எல்லா விவரமுஞ் சொல்லி, என்னை இங்கு துரத்தினான். நிலம் வாங்குவதற்காக மூன்னூறு ரூபாய் அனுப்பினனல்லவா, அதை எடுத்துக்கொண்டு உங்களையும் கையோடு பிடித்துக் கொண்டு ஓடிவரச் சொன்னான்! பாவம் நல்ல பையன்! எப்படிக் கவலை யடைந்துகொண்டு கிடக்கிறானோ!" என்றான்.

"ரூபாய் எதற்கு?" என்றேன், சந்தேகமாக.

"ரூபாயால்தான் எல்லாம் ஆகவேண்டும்; எடுத்துக்கொண்டு புறப்படுங்கள்" என்றான்.

"போன வாரமே நிலம் வாங்கிவிட்டேனே" என்று புளுகினேன்.

"அட்டா! அவன் கதி என்ன ஆகப்போகிறதோ! சரி; தொலையட்டும்! ரயில் சார்ஜாகிலும் எடுத்துக் கொண்டு கிளம்புங்கள்" என்றான்.

அவன் கூறுவது, பொய் யென்றோ, மெய்யென்றோ நான் எப்படி அறிவது? என்ன இருந்தாலும் பெற்ற மனமல்லவா!

"கையில் பணமேயில்லை; இதோ இரண்டு ரூபாய் வாங்கிக் கொண்டு வருகிறேன்" என்று இந்தத் தெருவாய்ச் சென்று, அந்தத் தெருவாய் வந்து 'கிளம்பு' என்றேன்; பொழுது போய்விட்டது.

இரவு பத்து மணிக்கு வண்டியேற வேண்டும். ஸ்டேஷன் தான் சனியனபிடித்த மாதிரி ஐந்து மைலில் இருக்கிறதே! அதோடு இருட்டு. லாந்தலை எடுத்துக்கொண்டு கிளம்பினோம்.

வீட்டிலுள்ளவர்கள், 'ஜாக்கிரதையாய்ப் போய்க் கவனித்துக்கொண்டு வாருங்கள்' என்று, அழாக் குறையாய்க் குமுறிக் கொண்டு கூறி வழி யனுப்பினார்கள். விஷயம் வேறு யாருக்கும் தெரியாது.

ஆயிற்று; நான்கு மைல் தாண்டினோம்; ஒரே இருட்டு; லாந்தலைக் கேட்டான்; கொடுத்தேன்; அதை அவித்து விட்டான்; எனக்கு அப்போதே 'சொரேல்' என்றது.

"டேய், முத்து! எங்கே, அந்த இரண்டு ரூபாயை இப்படிக் கொடு!" என்று அவன் கூறும்போது, நான், என் காதுகளையே நம்ப முடியால் இருந்தேன். அவன், அழுத்தமாக, 'சீக்கிரம்!' என்றான். அவன் கையில் ஒரு சட்டி இருந்ததை நான், அப்பொழுதுதான் பார்த்தேன்.

என் கை, கால்கள் எல்லாம் ஆடத் தொடங்கின. தனியாக முடிந்து வைத்திருந்த ஐந்து ரூபாயை அவிழ்த்தேன். அவன்

அதை இட்டு கையால் வாங்கி அதே கையால் என் தலையில் ஓங்கி ஒரு முட்டு முட்டினான். நான், 'ஓ' வென்று அலறினேன்.

"மூடு, வாயை. பேசாதே" என்று மேலும் ஓர் முட்டுக் கொடுத்து, ஈட்டியை ஓங்கினான்: "சாமி! இதையும் வாங்கிக் கொண்டு என்னை உயிரோடு விட்டு விடுங்கள்" என்று, அடுத்த முடிச்சை அவிழ்க்க ஆரம்பித்தேன். அப்பொழுதாகிலும் உயிரோடு விடமாட்டானா, என்று நினைத்தேன்."

"சரியாய்—முன்னூறுதானே?" என்றான்.

"ஆமாங்க சாமி" என்றேன். "சரி, மூச்சுவிடாமல் வந்த வழியே ஓடு" என்று சொல்லிக் கொண்டே இரண்டடி எடுத்து வைத்து, "இதை...முதலிலேயே கொடுத்திருந்தால்?..."என்று கேட்டுவிட்டுக் கிளம்பினான். பிறகு சற்று தூரம் சென்று, ஈாந் தலை எறிந்துவிட்டுச் சென்றான். இருட்டில் அது எங்கு விழுந் ததோ, நான்தான் இங்கு எப்படி வந்து சேர்ந்தேனோ என்பதெல் லாம் என்னால் நினைக்கவும் முடியவில்லை.

பிறகு, ஆறுமுகத்துக்குக் கடிதம் எழுதச் சொன்னேன்; பதில் எழுதியது இருக்கிறது; பாருங்கள்" என்று, படுக்கையின் கீழி ருந்து முத்துப்பண்டாரம் ஒரு கடிதத்தை எடுத்து நீட்டினான்.

அதைப் படித்தேன். பாவம், நான் எதைச் சொல்ல? 'ஆறு முகத்தின் கதறல்' என்று அந்தக் கடிதத்திற்குப் பெயர் வைக்க லாமா என்று நினைத்தேன்.

ஏனென்றால், தன்னிடம் அவன், பல கேள்விகளை சாதுர்ய மாகக் கேட்டுப் புலம் விசாரித்த வகையெல்லாம் ஆறுமுகம் அதில் விரிவாய்க் குறித்துக் கண்ணீர் விட்டிருந்தான்.

முத்துப் பண்டாரத்திற்கு உலகம் (பூமி) 'சுழலு'வதாக ஓர் உணர்ச்சி இப்பொழுதுதான் ஏற்பட்டிருக்கிறது போலும்! பின் ஏன் அவன், படுக்கையாய்க் கிடக்கிறான்!

# தேவ தேவி

(வத்றப்-சு. மீ. கணபதி)



(சென்ற இதழின் தொடர்ச்சி.)

“வாசு கூறியது சரிதான். பெரிய மனுஷிமாதிரி யோசனைகள், நியாயங்கள் இவைகளை எடுத்துக்கூற ஆரம்பித்து விட்டாயோ? வாசுவுக்கும், அவர்களுக்கும் பேசத் தெரியாததை நீ கூறுவதாக எண்ணிக் கொண்டிருக்கிறாய்போல் தெரிகிறது. இதுபோன்று மற்ற இடங்களில் பேசினால் உன்னை லகுவில் விடமாட்டார்கள் என்பதை மனதில் வைத்துக்கொள்” என்றான் சோமு.

பத்மாசனி இடையில், “அவளைக் கோபித்துக் கொள்ளாதீர்கள். வயதில் சிறியவளாக யிருந்தாலும் நியாயம் தெரிந்து பேசினாள். அவள் மீது எங்களுக்குக் கோபமே கிடையாது. அவள் எடுத்துக்கூறிய நியாயங்களுக்காக நான் ஆச்சர்யப்பட்டுக் கொண்டிருந்தேன். மிகவும் புத்திசாலியான பெண். அவளுடன் கூட இருப்பதற்கு எனக்கு வசதியிருந்தால் அவசியம் நான் அப்படியே செய்வேன். எனக்கு அதுதான் கவலை. எல்லோரும் உங்களுடைய வீட்டிற்குச் சென்று சொல்லிக்கொண்டு வரலாமென நினைக்கிறேன். ரயிலுக்கு நேரமாகி விடும்” என்றாள்.

“இவ்வளவு சடுதியில் புறப்படுவானேன்? சில நாட்களிருந்து போகக்கூடாதா?” என்றான் சோமு.

“நான் இங்கிருந்தால் என் வேலையைக் கவனிக்க வேண்டுமே. சிறிது ஜுரமாகவு மிருக்கிறது. இருந்தாலும் அவசியம் நாங்கள் போக வேண்டியதுதான். எங்களை மறந்து விடாதீர்கள். நானிருக்கும் ஊர்ப்பக்கம் வந்தால் அவசியம் என்னைப் பார்க்கவேண்டும். சுந்திரா! உன்னைப் பிரிவது தான் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. புத்திசாலியாக இரம்மா. கடவுள் உனக்கு எல்லா அதிர்ஷ்டமும் கொடுப்பார்” என்று பத்மாசனி கூறி, தான் மட்டில் சென்று சோமுவின் வீட்டில் விடை பெற்றுக்கொண்டு வந்து விட்டாள். தங்களுடைய மூட்டைகளை ஒழுங்கு செய்துகொண்டு தயாரா யிருந்தாள். ரயிலில் அவர்களை அனுப்ப சோமுவும், சுந்திராவும், வாசுவுடன் சென்றிருந்தனர். சுந்திராவும், சுவர்ணமும் பிரிவைச் சகிக்க முடியாது கண்ணீர் பெருக்கினர். ரயில் அவர்களைச் சுமந்து சென்று விட்டது. வாசு பெருமூச்சு விட்டான். “அடே சோமு! சுந்திரா என்ன கலாட்டா பண்ணி விட்டாள் தெரியுமா? வக்காலத்து வாங்கிப் பேச ஆரம்பித்தாள். எனக்குப் பதில் சொல்லவே முடியாதபடி ‘ஆர்குமெண்டு.’ நீ இருந்து அதனைக் கேட்காமல் போய்விட்டாயே என்று வருந்துகிறேன். சுந்திரா இவ்வளவு பேசியதில் அவர்களுக்கு அவள் மீது பேரன்பு விழுந்துவிட்டது. அப்பா! இதுபோன்று இவள் பேச ஆரம்பித்தால் நம் வாய் அடைபட வேண்டியது தான். சுந்திரா சரியான வேலை செய்தாய். ஆனாலும் உன் குறும்புத்தனம் இன்று மிகவும் உச்ச நிலையை அடைந்துவிட்டது. என்னைப் பேச முடியாதபடி. இனிமேல் வாக்குவாதம் செய்யாம லிருப்பாயா” என்று கூறி நகைத்தான் வாசு.

“அவர்களுக்கு என்மீது சந்தேகம். என்னை நினைத்து நீங்கள் சுவர்ணுவை வெறுப்பதாக அவர்கள் எண்ணி யிருக்கிறார்கள் என்பதை நான்

வந்தபொழுது அந்தப் பெரிய அம்மா முகம் சுளித்ததாலறிந்தேன். உடனே அவர்கள் என்மீது நம்பிக்கை கொள்ளும்படி நடக்க முயற்சித்து அதில் வெற்றி பெற்று விட்டேன். சுவர்ணு நல்ல பெண்தான். ஆயினும் விதி யிருக்கிறதே. அது எங்கு அவளைக் கொண்டுபோய்ச் சேர்க்குமோ'' என்ருன். அதற்குள் தங்கள் வீடு வந்ததால் எல்லோரும் உட்புகுந்தனர்.

———o———

# ஏழாவது அதிகாரம்

## எங்கள் சரிதை

''சரித்திரம் என்ருல் பெரும்பாலும் ஓர் உண்மைச் சம்பவத்தைக் கூறுவதுதான். இதில் மற்ற எந்த வகையும் கலக்காது. சுவாரஸ்யமாயிருப்பதற்காக கற்பனைகளைச் சேர்ப்பதுண்டு. அதுவும் பொருத்தமான இடத்தில்தான். கற்பனைகள் எதுவுமின்றி எங்களுடைய சரித்திரத்தைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று சோமு, வாசுவுடன் பழகிய பின்பு ஒருநாள் கூறினுன்.

''அதிக காலம் வாழ்ந்தவருமில்லை அதிக நாள் கெட்டவரு மில்லை என்பார்கள். எங்களுடைய குடும்பம் பரம்பரையாகப் பெரிய மிராசுதார் குடும்பம். இன்றும் எங்களை விமலபுரம் ஜனங்கள் இவ்விதமே அழைக்கின்றனர். பிறரிடம் சேவகம் செய்வது இழிவு எனவே என் தகப்பனுர் வரையில் கருதி வந்தனர். ஆனுலும் என் தகப்பனுர் ஓர் கடையில் குமாஸ்தாவாகத்தா னிருக்கவேண்டி நேரிட்டது. அவருக்கு முன்பிருந்தவர்கள் காலத்திலேயே எங்கள் பரம்பரைச் செல்வம் பிறர் வசமாயிற்று. என் தகப்பனுர், தான் இறக்கும்வரை முப்பது ரூபாயிலேயே காலங் கழிக்க நேர்ந்துவிட்டது. என்னுடைய நற்காலமோ என்னமோ அந்த சம்பளத்தில் என்னையும், சுந்திராவையும் படிக்க வைத்தார். என்னைக் கலாசாலையில் சேர்க்க அவர் மிகுந்த பிரயாசை எடுத்துக்கொண்டார். உபகாரச் சம்பளம் பாதி கொடுப்பதாகச் சொன்னுர்கள். மிகுந்த பாதியை கஞ்சி காய்ச்சிக் குடித்தாவது கொடுக்கிறேன் என்ருர். அப்பொழுதே எனக்குக் குடும்பக் கஷ்டம் நன்கு தெரிந்தது. ஆகவே, நான் மறுத்துவிட்டேன். எவ்வளவோ மன்ருடினுர். 'படிக்கும் உனக்கு வீட்டுக்கவலை வேண்டாம். நீ முன்னுக்கு வந்து சம்பாதித்தால் அதில் என் பிற்காலத்தை நிம்மதியாகக் கழிப்பேன்' என்ருர். நான் மறுத்துவிட்டு எனக்கு வேலைக்கு முயற்சி செய்யும்படி கூறினேன். வேறு வகையறியாது அதற்கு வேண்டிய பிரயத்தனம் எடுத்துக்கொண்டார். சர்க்கார் உத்தியோகஸ்தர்களைப் பேட்டி கண்டு பார்த்தார். வீணுயிற்று. அதன்மேல் தன்போன்றே என்னையும் ஒரு கடையில் கணக்கு எழுத உட்கார்த்தி வைத்தார்.

எனக்கு சம்பளம் பதினைந்து ரூபாய். இதைக் கண்டு என் மனம் ஒரு புறம் வருந்திற்று. இந்தப் பதினைந்து ரூபாய்களுக்கு—இந்தக் கணக்கெழுதும் உத்யோகத்திற்கு இவ்வளவு ஏன் படித்திருக்கவேண்டும் என்றே அல்லும்பகலும் சிந்தனை. ரோடிலுள்ள தூசிகளெல்லாம் என் முகத்தின் மீது தான். இதை நினைத்துப் பயந்தேன். இருமல் வியாதிக்கு இந்த தூசி தானே காரணம்? ஒரு சமயம் நம்மை இந்த வியாதி பற்றிக்கொண்டதானுல் என்ன செய்வது என்று நினைத்து உடல் நடுங்குவேன். எழுத்து வாசனை சிறிது மற்ற நானிருந்த கடைக்காரன் அதிகாரமாக ஏதாவது கூறினுல் அவன் எஜமானன் கூறுகிருன் என எண்ணுவதில்லை. அதைப் பற்றி

வருந்துவேன். ஆனல் இதையெல்லாம் நான் இப்பொழுது கூறுகிறேனே தவிர என் வீட்டில் சொல்லியவனல்ல. இரவில் தனிமையில் அழுவேன். என் கூடப் படித்த பையன்கள் என் வேலையைப்பற்றிப் பரிகசிப்பதும் உண்டு. இந்த துன்ப எண்ணங்களெல்லாம் ஒருநாள் மாறிவிடும். அதாவது நான் சம்பளம் வாங்கும் தினத்தில், ஆனந்தத்துடன் வீட்டில் கொண்டு போய்க் கொடுப்பேன். என் தகப்பனரும் அதனைப் பெரிய பொக்கிஷமெனவே கருதுவார். நானும் குடும்ப பாரத்தைச் சிறிது குறைத்தோம் என்ற ஆறுதலடைவேன்.

இதன் மத்தியில், மாதத்தில் குறைந்தது மனுக்கள் எழுதுவதில் ஒரு ரூபாய் வரை செலவு செய்து வந்தேன். இந்த வாழ்வு மூன்று மாதங்கள் நீடித்தது. சப் கலெக்டர் ஆபீஸிலிருந்து 40 ரூபாயில் வேலை பார்க்கும்படி இந்த மதுராபுரியிலிருந்தே உத்திரவு வந்தது. எங்களில்லத்தில் இந்த உத்திரவு வந்த தினம் பெரிய உற்சவம்போன்று கொண்டாடினார்கள். கடை வேலையை விட்டு இங்குவந்தேன். வந்தபிறகு வேலை இரண்டு மாதத்திற்குத்தான் எனத் தெரிந்தது. ஒருவர் லீவுக்குப் பதிலாக என்னைப் போட்டிருந்தார்கள். உத்திரவு அனுப்புவதில் இத்தனை ரூபாயில் உன்னை நியமிக்கப் பட்டிருக்கிறது. உடனே வேலையில் சேரவேண்டும் என்று கொடுக்கப்பட்டிருந்ததால் நான் நிரந்தரமான வேலை என நினைத்தது போய், பதில் என்று தெரிந்தது. முதலில் சிறிது வருந்தினேன். மிகவும் கஷ்டப்பட்டு என் செலவைக் குறைத்துக்கொண்டு மாதம் இருபத்தி இரண்டு ரூபாய் வீட்டிற்கு அனுப்பிவைத்தேன். எனக்கு மறுபடியும் ஒரு மாதம் வேலை கிடைத்தது. இத்துடன் வீடு திரும்பவேண்டியதாயிற்று.

வீடு வந்ததும் வேலையில்லை. ஒரு கடையிலும் என்னை வேலைக்கு வைத்துக்கொள்ள விரும்பவில்லை. 'திடீரென்று வேறு வேலை என்று போய் விட்டால் ஆளுக்கு நாங்களென்ன ஐயா செய்வது? இங்கு வேலை கொடுக்க முடியாது' எனக் கூறிவிட்டனர். என் தகப்பனர் அவ்விதம் நேரிட்டால் பதில் ஆள் கிடைக்கும்வரைதான் இரவில் கணக்குகளை ஊதியமின்றி எழுதித் தருவதாகச் சொன்னதையும் கேட்க மறுத்தனர். இந்த நிலைமை மூன்று மாதங்களுக்கு நீடித்தது. இதற்காக நான் வருந்தினேன். ஆனல் என் வீட்டில் நம்பிக்கையுடனிருந்தனர். ஒரு தடவை வேலை கிடைத்த பின்பு மறுபடியும் கிடைக்கும் என்று எனக்கு சமாதானம் கூறிவந்தனர்.

வீட்டில் தண்டச்சோறு தின்னவேண்டியிருக்கிறதே என்ன சொல்வார்களோ என்ற என் கவலையும் சிறிது மாறிற்று. மூன்று மாதங்கள் ஓய்வெடுத்துக்கொண்ட பின்பு என் தகப்பனரிருந்த இடத்தில் சப் ரிஜிஸ்திரார் ஆபீஸில் ஒரு மாதம் முப்பத்தி ஐந்து ரூபாய்க்கு வேலை கிடைத்தது. இதைப் பெரிய பாக்யமெனவே கருதினேம். மறுபடியும் நான் வேலை செய்வதால் உடல் இளைத்துவிடலாமென எண்ணி கடவுள் இரண்டு மாதங்கள் ஓய்வு கொடுத்தார். மதுரபுரி சப்கலெக்டர் ஆபீஸில் முன் பார்த்தபடி வேலை கிடைத்தது. ஒவ்வொரு மாதம், இரண்டு மாதம், மூன்று மாதம் என்று காலி ஏற்பட்ட ஸ்தானங்களிலெல்லாம் வேலை செய்து வந்தேன். இடையில் விட்டுப் போகாமல் இரண்டு வருடங்கள் முடியும் சமயம் ஒரு குமாஸ்தா வேலையிலிருந்து பென்ஷன் பெற்றார். அதில் எனக்குக் காயமானது உனக்குத் தெரிந்திருக்கலாம். நீ வேலைக்கு வந்த மூன்றுமாதங்களுக்கு அப்பால்தான் நிரந்தரமாயிற்று.

(தொடரும்)

## சுபானு ஷு மாசிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா (வ) | க | பா | க | பா (வ) | க | பா | க |
| 1 | 9 | 27 | 23 | 300 | 06 | 161 | 06 | 48 | 04 | 277 | 37 | 119 | 00 | 266 | 25 | 56 | 48 | 102 | 49 |
| 2 | 9 | 31 | 20 | 301 | 06 | 173 | 12 | 48 | 23 | 279 | 00 | 118 | 52 | 267 | 38 | 56 | 47 | 102 | 46 |
| 3 | 9 | 35 | 16 | 302 | 07 | 185 | 19 | 48 | 43 | 280 | 24 | 118 | 44 | 268 | 52 | 56 | 46 | 102 | 43 |
| 4 | 9 | 39 | 13 | 303 | 07 | 197 | 53 | 49 | 04 | 281 | 50 | 118 | 36 | 270 | 05 | 56 | 46 | 102 | 40 |
| 5 | 9 | 43 | 09 | 304 | 08 | 210 | 27 | 49 | 25 | 283 | 16 | 118 | 28 | 271 | 19 | 56 | 45 | 102 | 36 |
| 6 | 9 | 47 | 06 | 305 | 08 | 223 | 42 | 49 | 46 | 284 | 44 | 118 | 20 | 272 | 32 | 56 | 45 | 102 | 33 |
| 7 | 9 | 51 | 02 | 306 | 08 | 236 | 57 | 50 | 07 | 286 | 12 | 118 | 13 | 273 | 46 | 56 | 45 | 102 | 30 |
| 8 | 9 | 54 | 59 | 307 | 08 | 251 | 03 | 50 | 29 | 287 | 41 | 118 | 05 | 274 | 59 | 56 | 45 | 102 | 27 |
| | | | | | | | | | | | | | | | | (வநி) | | | |
| 9 | 9 | 58 | 55 | 308 | 09 | 265 | 10 | 50 | 51 | 289 | 11 | 117 | 58 | 276 | 13 | 56 | 45 | 102 | 24 |
| 10 | 10 | 02 | 52 | 309 | 09 | 280 | 03 | 51 | 14 | 290 | 43 | 117 | 50 | 277 | 26 | 56 | 45 | 102 | 20 |
| 11 | 10 | 06 | 48 | 310 | 10 | 294 | 56 | 51 | 37 | 292 | 16 | 117 | 42 | 278 | 40 | 56 | 45 | 102 | 17 |
| 12 | 10 | 10 | 45 | 311 | 10 | 310 | 10 | 52 | 00 | 293 | 49 | 117 | 34 | 279 | 53 | 56 | 45 | 102 | 14 |
| 13 | 10 | 14 | 41 | 312 | 11 | 325 | 24 | 52 | 23 | 295 | 23 | 117 | 27 | 281 | 07 | 56 | 46 | 102 | 11 |
| 14 | 10 | 18 | 38 | 313 | 11 | 340 | 21 | 52 | 47 | 296 | 59 | 117 | 19 | 282 | 20 | 56 | 46 | 102 | 08 |
| 15 | 10 | 22 | 34 | 314 | 12 | 355 | 17 | 53 | 11 | 298 | 35 | 117 | 12 | 283 | 34 | 56 | 47 | 102 | 05 |
| 16 | 10 | 26 | 31 | 315 | 12 | 09 | 21 | 53 | 35 | 300 | 13 | 117 | 04 | 284 | 47 | 56 | 48 | 102 | 02 |
| 17 | 10 | 30 | 27 | 316 | 13 | 23 | 25 | 53 | 59 | 301 | 51 | 116 | 57 | 286 | 01 | 56 | 49 | 101 | 59 |
| 18 | 10 | 34 | 24 | 317 | 13 | 36 | 42 | 54 | 24 | 303 | 31 | 116 | 50 | 287 | 15 | 56 | 50 | 101 | 55 |
| 19 | 10 | 38 | 20 | 318 | 14 | 49 | 59 | 54 | 49 | 305 | 11 | 116 | 43 | 288 | 29 | 56 | 51 | 101 | 52 |
| 20 | 10 | 42 | 17 | 319 | 14 | 62 | 27 | 55 | 14 | 306 | 53 | 116 | 36 | 289 | 42 | 56 | 52 | 101 | 48 |
| 21 | 10 | 46 | 13 | 320 | 14 | 74 | 54 | 55 | 40 | 308 | 35 | 116 | 30 | 290 | 56 | 56 | 53 | 101 | 45 |
| 22 | 10 | 50 | 10 | 321 | 14 | 86 | 54 | 56 | 06 | 310 | 19 | 116 | 23 | 292 | 10 | 56 | 54 | 101 | 42 |
| 23 | 10 | 54 | 06 | 322 | 15 | 98 | 53 | 56 | 32 | 312 | 03 | 116 | 17 | 293 | 24 | 56 | 56 | 101 | 39 |
| 24 | 10 | 58 | 03 | 323 | 15 | 110 | 41 | 56 | 58 | 313 | 49 | 116 | 10 | 294 | 37 | 56 | 58 | 101 | 36 |
| 25 | 11 | 01 | 59 | 324 | 16 | 122 | 29 | 57 | 24 | 315 | 36 | 116 | 04 | 295 | 51 | 57 | 00 | 101 | 33 |
| 26 | 11 | 05 | 56 | 325 | 16 | 134 | 23 | 57 | 51 | 317 | 24 | 115 | 58 | 297 | 05 | 57 | 02 | 101 | 29 |
| 27 | 11 | 09 | 52 | 326 | 17 | 146 | 10 | 58 | 18 | 319 | 13 | 115 | 52 | 298 | 19 | 57 | 04 | 101 | 26 |
| 28 | 11 | 13 | 49 | 327 | 17 | 158 | 10 | 58 | 45 | 321 | 04 | 115 | 46 | 299 | 32 | 57 | 06 | 101 | 23 |
| 29 | 11 | 17 | 45 | 328 | 18 | 170 | 10 | 59 | 12 | 322 | 55 | 115 | 40 | 300 | 46 | 57 | 08 | 101 | 20 |
| 30 | 11 | 21 | 42 | 329 | 19 | 182 | 18 | 59 | 39 | 324 | 48 | 115 | 34 | 302 | 00 | 57 | 10 | 101 | 17 |

ஆகாயக் காட்சி:-
18உ இரவு மணி 9-30க்கு சசிக்கு வடக்கில் பா 6-30ல் குஜனும்,
10உ ,, ,, 11-56க்கு ,, தெற்கில் பா 2-05ல் புதனும்,
24உ மாலை ,, 7-40க்கு ,, வடக்கில் பா 0-26ல் குருவும்,
9உ இரவு ,, 3-30க்கு ,, தெற்கில் பா 0-16ல் சுக்ரனும்,
19உ ,, ,, 6-48க்கு ,, வடக்கில் பா 3-00ல் சனியும்
சந்திரன் நிற்கும் ரேகாம்சத்தில் வருகின்றன.

பிரவேசங்கள் முதலியன:—15உ இரவு மணி 3-49க்கு புதன் கும்பத்திற்கும், 28உ பகல் மணி 4-05க்கு சுக்ரன் கும்ப ராசிக்கும், 30உ இரவு மணி 11-32க்கு அங்காரகன் மிதுன ராசிக்கும் பிரவேசிக்கின்றன. 9உ சனி வக்ர த்யாகம் பெறுகிறது,

* அயனும்சம் பா-22 கலை-56 விகலை 44·8870 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

† ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சுபானு௵ மாசிமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1353, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1363
இங்கிலீஷ் 1944௵ பிப்ரவரிமீ—1944௵ மார்ச்மீ

| மாசிமீ | பிப்ரவரி மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | ஞா | சது28-48 | அ51-03 | அ51-03சி | விஷ்ணுபதி புண்ய காலம், சங்கட சதுர்த்தி |
| 2 | 14 | திங் | பஞ்31-43 | சித்55-15 | பி55-15அ | மந்திரார்த்தங்கள் |
| 3 | 15 | செவ் | சஷ்33-37 | சு58-12 | சி58-12ம | ஆராய்ச்சிகள் |
| 4 | 16 | புத | சப்34-45 | வி59-23 | சித்60 | திஸ்ரோஷ்டகா [சிரார்த்தம் |
| 5 | 17 | வியா | அ34-12 | அ59-47 | சி59-23பி | திஸ்ரோஷ்டகா-அஷ்டக |
| 6 | 18 | வெள் | நவ32-23 | கே58-51 | ம58-51அ | ராமதாஸ நவமி |
| 7 | 19 | சனி | தச28-47 | மூல57-07 | சித்60 | யந்திரம் பயில-பயிற்ற |
| 8 | 20 | ஞா | ஏ24-35 | பூர24-35 | சி55-35அ | மீனாயனம் நா-42, வி-08 |
| 9 | 21 | திங் | து19-48 | உத்50-57 | ம50-57அ | பிரதோஷம், திதி த்துவயம் |
| 10 | 22 | செவ் | திர14-58 | திரு47-23 | சித்60 | மகா சிவராத்திரி |
| 11 | 23 | புத | சசி9-40 | அ43-12 | பி43-12சி | **அமாவாஸ்யை விரதம்** |
| 12 | 24 | வியா | ●3-36 பிர57-35 | சத39-07 | ம39-07சி | பால்குன சுத்தம், அவமாகம் |
| 13 | 25 | வெள் | துதி51-40 | பூ35-24 | சித்60 | புலனறிய தூது செல்ல |
| 14 | 26 | சனி | திரு46-17 | உட்31-49 | சி39-07பி | வடிராஜ சுவாமிகள் புண்ய |
| 15 | 27 | ஞா | சது41-23 | ரே28-13 | அ28-13சி | சதுர்த்தி விரதம் [தினம் |
| 16 | 28 | திங் | பஞ்37-48 | அசு25-5 | சித்60 | கரிநாள்-சுபம் விலக்க |
| 17 | 29 | செவ் | சஷ்34-51 | பர24-35 | சித்60 | சஷ்டி விரதம், சத்திய விரத தீர்த்த புண்ய தினம் |
| 18 | 1 | புத | சப்32-58 | ✲24-11 | அ24-11சி | **கிருத்திகை விரதம்** |
| 19 | 2 1944௵ மார்ச்மீ | வியா | அ31-45 | ரோ24-36 | மர60 | சனி செவ் |
| 20 | 3 | வெள் | நவ32-23 | மிரு26-25 | சித்60 | |
| 21 | 4 | சனி | தச34-10 | திரு29-27 | சித்60 | சூரி — 3-மக-சுக் 9-வ.தியா.ச — குரு ராகு |
| 22 | 5 | ஞா | ஏ37-16 | புன34-17 | சித்60 | 15-கும்-புத |
| 23 | 6 | திங் | துவ41-23 | பூச39-33 | சித்60 | புத கே — 28-கும்ப-சுக் |
| 24 | 7 | செவ் | திர46-47 | ஆ45-35 | சித்60 | 30-மிது-செ |
| 25 | 8 | புத | சசி52-13 | மக51-40 | சி51-40அ | சுக் |
| 26 | 9 | வியா | ப○57-00 | பூர58-13 | சி58-13ம | |
| 27 | 10 | வெள் | பிர60-00 | உத்60-00 | சித்60 | வஸந்தோற்சவம் |
| 28 | 11 | சனி | பிர1-48 | உத்4-15 | மர60 | பால்குன பகுளம் |
| 29 | 12 | ஞா | துதி5-23 | அஸ்9-36 | அ9-36சி | சாதுர் மாஸ்ய த்வதியா |
| 30 | 13 | திங் | திரு8-25 | சித்13-47 | பி13-47அ | மீன ரவி நா-41, வி-06, ஷடசீதி புண்ய காலம் |

**Edited, Printed & Published by N. Munisawmy Mudaliar,**
**At The "Ananda Bodhini" Press,**
**No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.**

# பூவுலக வாழ்க்கைக்கு இன்றியமையாத சிங்கபலத்தைத் தருவதெது?




முறையாய் செய்த அயக்காந்த செந்தூரத்தைக்காட்டிலும் தேகபலத்தைத் தரும் ஔடதம் வேறொன்றுமில்லை.

**விளம்பரம்.** **இதைக் கண்ணுறும் கனவான்களே!** இந்த லேகிய செந்தூரங்கள் சாமான்யமானவையல்ல. அபாரமான பலத்தைத் தரக்கூடிய சக்தி அமைந்துள்ளவை. உறுதியாய் இவற்றை நம்பி வாங்கிச் சாப்பிட்டால் ஒரு தடவையிலேயே இவற்றின் குணம் நன்கு விளங்கும்.

தற்காலத்தில் மனிதரின் பால்ய சேஷ்டையாலும், இரத்தப் போக்காலும் அவர்க்கு உண்டான 20-வகை ரோகங்கள், சூலைரோகம், குன்மரோகம், பித்தபாண்டு, கை கால் முடக்கு, ஓடுவாய்வு, பித்த ஏப்பம், நெஞ்சு தொண்டை எரிச்சல், வயிற்றுப்பிசம், அஜீரணம், பசியில்லாமை, தாது ஹீனம், தேக உளைச்சல், கண்ணில் நீர்வடிதல், சோம்பல், நித்திரையில்லாமை, தலை சுழற்றல், நீர் இறங்கும்போது பொறுக்க முடியாத பாதையைத் தரும் தந்திமேகம் முதலியவைகள் ஆச்சரியப்படத்தக்க விதமாய் நீக்கிவிடும். பயங்கரமான மேக சம்பந்த வியாதிகளைப் பத்தே வேளையில் போக்கி சப்த நரம்புகளுக்கும் முறுக்கேற்றி அபரிமிதமான இரத்த விருத்தியைப் பெருக்கிப் பலத்தைத் தருவதில் இதற்கு மிஞ்சின லேகிய பஸ்பம் வேறெங்குமில்லை என்று நாம் உறுதியாகச் சொல்வோம். இதல்லாமல் தேகத்தை புஷ்டியாக்கித் தேகத்தடிப்பு, நகக்கண் வெளுத்திருத்தல் முதலிய வியாதிகளைக் கண்டித்து, தினந்தோறும் மலத்தைத் தாராளமாய்ப் போக்குவதில் இந்த லேகிய செந்தூரங்களே முதன்மையானவை யென்பதே யாம் எமது அனுபவத்தில் கண்டிருக்கிறோம். நிற்க,

இந்த லேகிய செந்தூரங்கள், மேற்கண்ட வியாதிகளைக் கண்டிப்பாய் நிவர்த்திக்குமா என்னும சந்தேகமுடையோர் பரீக்ஷார்த்தமாக முதலில் 48-நாளாவது வாங்கி யுண்டால் இவற்றின் அபாரகுணம் தெரியவரும். தவிர, யாங்கள் இம் மகத்துவம் பொருந்திய லேகிய செந்தூரங்களை எவ்வளவு சிறப்பித்துக் கூறியபோதிலும் அது தகும். மேலும் இவற்றை நோய் உள்ளவர்கள் தாம் சாப்பிடவேண்டும் என்ற அவசியமில்லை: யாவரும் சாப்பிடலாம். நோய் உள்ளவர்களைவிட நோய் இல்லாதவர்கள் எண்ணிக்கையாக 48-நாள் லேகிய செந்தூரங்களை யாதும் பத்தியமின்றிச் சாப்பிட அவர்க்கு நல்ல பலம் ஏற்படும்: இது தவறாது. இவற்றைத் தருவித்து நீங்கள் எண்ணிக்கையாக 10-நாளைக்குச் சாப்பிட்டால் அவற்றின் குணம் உங்களுக்கு நன்றாய்த் தெரியும்.

இந்த லேகிய செந்தூரங்களுக்குப் பத்தியமே கிடையாது. எந்தப் பண்டங்களையும் நீக்குதலின்றி மருந்து சாப்பிடும் காலத்தில் வயிற்றுக்குத் துரோகம் செய்யாமல் சாப்பிடலாம். இவற்றைச் சாப்பிடும்போது பசி அதிகமாய் எடுக்கும். ஆதலால் பச்சைப்பயற்றுக் குழம்பு தயிர், பால். கறி, மார்கண்ட சூப்பு. நெய் இவைகளை அதிகமாய்ப் பசியைத் தணிக்கக் கூடிய விதமாகத் தாமதம செய்யாமல் சாப்பிட்டு வரவேண்டியது. இவற்றைப் புசிக்கும்போ தெல்லாம் பலகாராதிகள் சாப்பிடல் வேண்டும். தயிர், பால், நெய், முதலியவைகள் எவைகளா யிருந்தாலும் சந்தேகமின்றிச் சாப்பிட்டு வரலாம்.

இந்தியா, ஸிலோன் ஆகிய உள்நாடுகளுக்கு 24-நாள் சாப்பிடக்கூடிய லேகியமும் செந்தூரமும் விலை ரூ. 1—12—0. போஸ்டேஜ் அணா 9. ஒரே தடவை 48-நாள் மருந்து வாங்குவோருக்கு தபாற்கூலி உள்பட ரூ. **4.**

ஸிலோனில் உள்ளோர் முழு தொகையையும் முன் பணமாக மணி ஆர்டர் அனுப்பி பெற்றுக் கொள்ளவும். முன் பணமின்றி வி. பி. யில் அனுப்பப்பட மாட்டா.

---

**விலாசம்:—லேகியம் டிபோ,**

**6, வெங்கடேச மேஸ்திரி தெரு, மதராஸ்.**

---

## கர்ணபிந்து



காதில் சீழ் வடிதல், காது குத்தல், காது கேளா திருத்தல், காதில் நமைச்சல் முதலிய வியாதிகளுக்கு இந்த மருந்தில் 2-துளி காலை மாலைகளில் காதில் விட்டு வர, காதிலுள்ள நோய்களெல்லாம் நீங்கி விடும்.

புட்டி 1-க்கு அணா . **4** வி. பி. தபாற்கூலி வேறு.

## (காட்லீவர் ஆயில்) மீன் எண்ணெய்

இது பலத்தை உண்டாக்குகிறது. தவிர இருமலினால் உண்டாகும் இளைப்பையும் அடக்கும். இளைத்தவர்கள் உபயோகித்தால் தேகப் புஷ்டியாகும்; இரத்தத்தைச் சுத்தி செய்யும், சுவாசகாசங்களின் ரோகத்தை குணப்படுத்தும், சரீரத்தினுடைய ஒவ்வொரு பாகத்துக்கும் பலத்தைக் கொடுக்கும். இதைக் குழந்தைகளுக்கும் கொடுக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூபா **1—8—0.**

---

**தனலட்சுமி கம்பெனி, 6, [illegible]யூர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்**

ஆனந்தபோதினி Regd. No. M. 1190



Edited, Printed and Published by N. MUNISAMI MUDALIAR, at the "ANANDA BODHINI PRESS" No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Sowcarpet, Madras.